# பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்


வைஷ்ணவ ரத்னம், தத்துவ தரிசனம்

A. ஸ்ரீராமுலு தேசிகன்



ஸ்ரீ கிருஷ்ணா பதிப்பகம்

புதுச்செங்கெல்குளம்

(வழி) ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 137

காமராசர் மாவட்டம்




முதற்பதிப்பு : [illegible] 1992

பிரதிகள் : 1000



விற்பனை உரிமை :

**வைகை புக்ஸ் சிண்டிகேட்**

*217-ஏ, தெற்கு மாசி வீதி*

*மதுரை - 625 001*

---

This book is published with the financial assistance of Thirumala Tirupati Devasthanams under the scheme "Aid to publish religious books".

---

அச்சிட்டோர் :

**வைகை அச்சகம்**

*மதுரை - 625 001*

***********************************



விருட்சங்கள் தருகின்றன — உலகுக்கு இனிய கனிகளை.
பசுக்கள் வழங்குகின்றன — உலகுக்கு அமிர்தமான பாலை.
நதிகள் பெருக்கெடுத்து ஓடுகின்றன — பயிர்களை
வளமுடன் வளரச் செய்வதற்காக.
இந்த மானுட உடல் அமைந்திருக்கிறது — உலகுக்கு
நன்மை செய்வதற்காக

கல்வியின் முடிவும் இதுவேயாம்; இம் முடிவைத் தம் வாழ்வின் குறிக்கோளாக ஏற்றுச் செயல்பட்டு வரும் மதிப்புமிகு டாக்டர் V. **கெங்குசாமி நாயுடு** அவர்களுக்கு இந்நூல் **சமர்ப்பணம்.**

***********************************

# பதிப்புரை

இளவேனிலின் ஆரம்பத்தில் மரத்திலே பூக்கும் பூக்கள் பெரும்பாலும் உதிர்ந்து விடும்.

அதுமாதிரிதான் கல்வியைப்பற்றிய சீர்திருத்தவாதிகளின் பேச்சுக்கள் உள்ளன.

அவர்கள் தருமத்தை உணராமல் தாம் சுயேச்சையாகச் சிந்திப்பவர்கள் என்ற தருக்கில் பேசுகிறார்கள்.

இழுத்த இழுப்புக்கெல்லாம் வருகின்ற நைலான் காலுறைகளைப் போல் உண்மையை உணராமல் இடங்களுக்குத் தகுந்தபடியெல்லாம் பேசுகிறார்கள்.

இயற்கையையும் சமூகத்தையும் இனிமையாக இணைப்பதற்குத் தருமநெறியில் நம்பிக்கையுடன் முயல்வதே சீர்திருத்தமாகும்.

அது, புனித எண்ணங்களை உருவாக்கும் கோயிலுக்கு அஸ்திவாரம்.

அந்த அஸ்திவாரத்தை உருவாக்குவது — கம்பன் கண்ட கல்வியின் ஐந்து படிகள்.

அவைகளைத் தன்னகத்தே கொண்டது — மகாத்மாஜி கண்ட ஆதாரக் கல்வி.

அந்த ஐந்து படிகளை விளக்கும் இந்நூலை உருவாக்கிய திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன் அவர்களுக்கும் இந்நூலைப் படிக்கும் வாசகப் பெருமக்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

எமது முந்தைய வெளியீடுகளை ஆதரித்ததைப் போல் இந்நூலையும் ஆதரிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்கிறோம்.

நூல்பற்றிய கருத்துக்களை வரவேற்கிறோம்.

— பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

*T. R. Dhinakaran,* **B.E.(Mech.)**
**CHAIRMAN**
**Shri Ramalinga Mills Limited**
**ARUPPUKOTTAI - 626 101**
**(Tamil Nadu)**

## அணிந்துரை

புதுச்செந்நெல்குளம், ஆன்மீக அன்பர் ஸ்ரீ **ஏ. ஸ்ரீராமுலு தேசிகன்,** நம் நாட்டின், தற்போதைய தேவையான கல்வி முறை மாற்றந்தனைக் கருத்திற் கொண்டு எழுதியுள்ள ''பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்'' என்ற நூலைப் படிக்கும் வாய்ப்புக் கிட்டியது. நம் நாட்டில் நிலவும் பொதுவான தவறுகளை யும், அவற்றிற்குப் பரிகாரங்களையும், பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், திருமூலர், திருவள்ளுவர், பாரதி, கம்பன் மற்றும் ஆழ்வார்களின் கூற்றின் மூலம் எளிமையாக எடுத்துக் கூறியுள்ளார். கோயிலில் கிடைக்கும் இன்பமும், அமைதியும், தெளிவும் நாம் பெறும் கல்வியின் மூலமும் கிடைக்க வேண்டும் என்பது இந்நூலின் சாரம். பாரத நாட்டிற்குகந்த புதிய கல்வி முறை ஒன்றை விரும்புவோரின் கருத்துக்களை இது பிரதிபலிக்கும்.

அவருக்கு என் அன்பான பாராட்டுக்களும், வாழ்த்துக்களும்.

எல்லாம் இறைவன் செயல்.

**(ஒம்.) T. R. தினகரன்**

டாக்டர் சரஸ்வதி இராமநாதன் எம்.ஏ., பிஎச்.டி.
பேராசிரியை, S. A. பெண்கள் கல்லூரி
பள்ளத்தூர் - 623 107

# அணிந்துரை

திருமாலடி போற்றும் தீந்தமிழ்ச் செல்வர், ''செஞ்சொல்மணி'' ஸ்ரீராமுலு தேசிகன் அவர்கள் எழுதிய 'பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்' நூலைப் படித்து மகிழ்ந்தேன். சீரிய சிந்தனை மலர்கள், ஆன்றோர்களின் அருள் வாக்குகளுடன் சேர்ந்து இம்மலரில் செழுமணம் வீசுகின்றன. மனப்பக்குவம் செய்ய வேண்டிய 'பள்ளிச்சாலைகள்' இன்று எப்படி உள்ளன? எப்படி இருக்க வேண்டும்? என்பதைப் பார்க்கத் தூண்டும் கருத்துச் சுரங்கம் இந்த நூல்.

கட்டுரை 1 : ஆலய மணியின் ஓசையில் இவர் தரும் விளக்கங்கள் அறிவுக்கு நல்ல விருந்தாகும்.

கட்டுரை 2 : 'பக்திக்கும் மரியாதைக்குமுரிய இடம் கோயில் மட்டுமல்ல; அவரவர் பணிபுரியும் இடங்களுமே'.

'சிறு ஊற்றாக நீர் கசிந்து வந்தாலும் பரவாயில்லை; அந்நீர் நல்ல குடிநீராக இருக்க வேண்டும்', என்ற அற்புத வரிகள் மட்டுமா! இன்னும் எத்தனை கருத்துக்கள் உள்ளன!

கட்டுரை 4 : சம்சாரம் எனும் காட்டிலே, ஜீவாத்மாவான காதலி பரமாத்மா கண்ணனைத் தேடுவதையும் மன்மதனாகிய வேடன் இடையே வந்து துன்புறுத்துவதையும் உருவகமாகக் காட்டும் நுட்பம் படித்து இன்புறுதற்குரியது.

கட்டுரை 5 : 'கம்பன் கண்ட கல்வி'தான் மகாத்மா கண்ட கல்வி என்பதை அழகாக நிறுவுகிறார். 'நன்னெறியை வளர்ப்பதுதான் கல்வியின் நோக்கம்' — இது மறுக்க முடியாத உண்மை.

கட்டுரை 6 : அறிவு வளர்ச்சியின் ஐந்து படிகள் வாழ்க்கையின் குறிக்கோளை அடைய வழிகாட்டும் ஐந்து இலக்கணங்கள்.

இந்நூல் அறிவுச் சுரங்கம்; ஆன்மீக ஒளிவிளக்கு; கல்விக் கூடங்களுக்குக் கலங்கரை விளக்கு. கல்வி எவ்வாறு இருக்க வேண்டும்; கல்விக் கூடங்கள் எவ்வாறு திகழ வேண்டும் என்றெல்லாம் வழிகாட்டும் ஒளிவிளக்கு. இந்நூலைப் படித்து அதன் வழி நடக்க முயல வேண்டும்.

ஆசிரியரின் சீரிய நேரிய பார்வை; கூரிய அறிவு; காந்தியச் சிந்தனை ஆகியவை போற்றற்குரியன.

வளர்க இவர்தம் பணி !

அன்புடன்
**சரசுவதி இராமநாதன்**

# அணிந்துரை

பேராசிரியர் டாக்டர் நா. பாலுசாமி
எம்.ஏ.,பி.எல்., எம்.லிட்.,பிஎச்.டி.
'தாயகம்'
16, சவகர் தெரு,
காந்திநகர், மதுரை - 20.

திரு. ஸ்ரீராமுலு தேசிகன் எழுதிய **பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்** என்ற நூலின் கையெழுத்துப் படிவத்தைப் படித்து மகிழ்ந்தேன். நண்பர் திரு. தேசிகன் நல்ல எழுத்தாளர். ஆழ்ந்த நூலறிவு உடையவர். சிந்தனை வளம் மிக்கவர். படிப்பவர் உள்ளம் கொள்ளும் வகையில் கருத்துக்களைத் தெளிவாகவும் இனிமையாகவும் சுவை குன்றாமல் விளக்கும் திறம் உடையவர். ஆராய்ச்சிப் புலமையும் பெற்றவர். நல்ல செம்பாகமான தமிழ் நடை வல்லவர். இப்பண்புகள் அனைத்தையும் இவரது படைப்பாகிய இந்நூல் நன்கு புலப்படுத்துகிறது.

ஆலயமணியின் ஓசை, பாரத தேவியின் இதயக்குமுறல், பாரதியின் இதயம், கண்ணன் என் காதலன் முதலிய தலைப்புக்களில் இவர் தரும் விளக்கங்கள் அறிவுக்கு விருந்தாகும். மாணவர்களும் பிற இளைஞர்களும் வாழ்வில் மேம்பாடு அடையத்தக்க நல்ல பல சிந்தனைகள் இதில் இடம் பெற்றுள்ளன. சமயம், பக்தி, சீரான வாழ்வு முதலியன பற்றிய செய்திகள் இவரது பரந்த சமய நூற் பயிற்சியையும் இலக்கியப் புலமையையும் எடுத்துக்காட்டுவனவாகும்.

கல்வி பற்றி இவர் தரும் விளக்கம் மனங் கொள்ளத் தகும். கவிச்சக்கரவர்த்தி கம்பரும் காந்தியடிகளும் கனவு கண்ட கல்வி முறையை இவர் தெளிவாக விளக்கியுள்ளார்.

ஒவ்வொருவருடைய வாழ்க்கையும் பயனுடையதாக அமைய இத்தகைய சீரிய சமய, பக்தி, ஒழுக்க நூல்கள் பலப்பல வெளிவருதல் வேண்டும். ஆசிரியர் ஸ்ரீராமுலு தேசிகன் மேலும் பல படைப்புக்களை இந்த வரிசையில் தருவாராயின், மக்கள் வாழ்வு மலர்ந்து மணம் வீசப் பெரிதும் உதவியாக இருக்கும். இவரது எழுத்துப்பணி சிறப்படையட்டும்; சிந்தனை தொடரட்டும்.

அன்பன்

**ஈா. பாலுசாமி**

# அணிந்துரை

வீ. செல்வராஜ் B.A.,B.T.
ஆசிரியர், ''கிராம ராஜ்யம்'' வாரஇதழ்
தமிழ்நாடு சர்வோதய சங்கம்
(முன்னாள் தலைவர்)

13/சே, சத்யசாய் நகர்
மதுரை - 625 003

'இன்றையக் கல்வி வாழ்க்கையுடன் தொடர்பில்லாத வறட்டுக்கல்வி; போட்டிமயமான ஏட்டுக் கல்வி; உற்பத்திக்கும் உழைப்பிற்கும் ஒவ்வாத வெள்ளைச் சட்டைக் கல்வி', என்று கல்வி நிபுணர்களின் கடுமையான விமர்சனங்களுக்கு ஆளாகி வரும் இன்றையக் கல்வி, நமக்கு மனநிறைவு அளிக்காத நிலையில் உள்ளது. எனவே உண்மையான வாழ்க்கைக் கல்வி எது? என்பதை அறிவுறுத்தும் சிந்தனைகளும் அவற்றைத் தாங்கி வரும் நூல்களும் நமக்குத் தேவைப்படுகின்றன.

இத் தேவையைப் பூர்த்தி செய்யும் பாங்கில் ஆசிரியர் திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன் அவர்கள் காந்தியடிகளின் ஆதாரக் கல்விக் கொள்கைகளுக்கு ஆக்கமளிக்கும் கம்பனின் கல்விக் கொள்கைகளை மிக நுணுக்கமுடன் ஒப்பு நோக்கி இலக்கியச் சுவையும் கருத்துச் செறிவும் மிக்க அற்புதமான நூல் ஒன்றை (பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்) இங்கு நம் முன் வைக்கிறார்.

இந் நூலாசிரியர் கூறியுள்ள கருத்துக்கள் ஆய்வுக்குரியவை; ஆழ்ந்து படித்துச் சிந்திக்கத் தக்கவை; பயனளிப்பவை. கல்வித் துறையில் நீண்டகால அனுபவமும், பக்தி மற்றும் ஆன்மீக நூலறிவும் அனுட்டானமும் வாய்க்கப் பெற்றுள்ள இந்நூலாசிரியரின் கருத்துக்கள் ஆசிரியர்கள், மாணவர்கள், கல்வித் துறையினர், கல்வித் திட்டத்தில் சிந்தனையுள்ள சிந்தனையாளர்கள் அனைவரும் படித்துப் பயன்பெறத் தக்கவை.

கேள்வி, தவம், அன்பு, தருமம், இன்பம் ஆகிய ஐந்து படிகளை வலியுறுத்தும் கம்பனின் கல்வி அம்சங்கள் காந்தியடிகளின் கல்விக் கொள்கைகளுடன் எவ்வாறு பொருந்துகின்றன என்பதை ஆசிரியர் இந்நூலில் விளக்கி யுள்ளார்.

இது போன்ற ஒப்பு நோக்கு இதுவரை வேறு எவரும் கல்வித் துறையில் செய்யத் துணியாத ஒரு புதுமை.

கம்பன் கண்ட கேள்வி, தவம், அன்பு, தருமம், இன்பம் ஆகிய ஐந்து படிகளின் தொகுப்பே ஆன்மீக உலகியல் காட்டும் வாழ்க்கைக் கல்வி; பள்ளித் தலமனைத் தும் கோயிலாகச் செய்யும் பரிச வேதி; காந்தியடிகள் கண்ட ஆதாரக் கல்வி.

இவ்வைந்து படிகளையும் படிப்படியாக அனைவருக்கும் புரியும் வண்ணம் விளக்க நூலாசிரியர் எடுத்தாட் கொண்ட நீதி நூல்கள், பக்தி இலக்கியங்கள், ஆன்மீக சாஸ்திரங்கள் பல. அவற்றிலிருந்து அவர் கையாண்டுள்ள எடுத்துக்காட்டு கள் ஏராளம், ஏராளம். அவை ஒவ்வொன்றும் சிந்தனைக் குரியவை; கருத்துச் சுவையுள்ளவை; படிக்கப் படிக்கத் திகட்டாதவை. மூல நூல்கள் பலவற்றுடன் உறவாடும் இனிய உணர்வை அளிக்கும் மன நிறைவு தருபவை. நூலாசிரியர் ஸ்ரீராமுலு தேசிகன் இதற்காக மேற் கொண்டுள்ள சிரத்தைக்கும் அர்ப்பணிப்புக்கும் அவை சாட்சி பகருகின்றன. அவருக்கு எமது உளமார்ந்த நன்றி.

— வி. செல்வராஜ்
ஆசிரியர், கிராமராஜ்யம் வாரஇதழ்

# அணிந்துரை

புலவர் ஆர். எஸ். கோமதிநாயகம் எம்.ஏ.,பி.எட்.
பள்ளித் துணை ஆய்வாளர்
திருவில்லிபுத்தூர் வட்டம்

அறப்பணிக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன். திருவில்லிபுத்தூருக்கு அருகிலுள்ள புதுச்செந்நெல்குளம் என்ற ஊரில் வாசம் செய்யும் வளமிகு எழுத்தாளர்; ஆன்மீகவாதி; நாச்சியார்பட்டி பள்ளியின் நல்லாசிரியர்; சிறந்த சொற்பொழிவாளர்.

அவர் எழுதிய ''பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்'' என்ற நூலைப் படித்துப் பார்த்தேன். ஆறு கட்டுரைகளைக் கொண்ட அந்நூல் அனைவர் கைகளிலும் தவழ வேண்டியதொன்றாகும். ''ஆலயமணியின் ஓசை'' என்ற தலைப்பில் 'சுத்த அறிவு ஒன்றே தெய்வம்' என்ற பாரதியின் கவிக்கூற்றை ஆலய மணியின் நா கணீர்! கணீர்! என ஓசை எழுப்புவது போல் வறட்டுத் தத்துவ ஞானிகளுக்கும் புறட்டுத் தர்ம நியதியாளர்க்கும் எச்சரிக்கை விடுத்து, அறிவியக்க ரீதியில் ஆன்ம நேயம், மனித நேயங்கட்குத் தேவை என்பதைக் கணிசமாகக் கூறியுள்ளார்.

''பாரத தேவியின் இதயக் குமுறல்'' என்ற தலைப்பில் 'செய்யும் தொழிலே தெய்வம்' என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். ''கண்ணன் என் காதலன்'' என்ற கட்டுரை வாயிலாக சினிமா என்ற கடலில் எழும் காம அலை, மலிவு விலை மது முதலானவை இன்றுள்ள சமுதாயத்தை எவ்வாறு எவ்வளவு தாக்கியுள்ளன என்பதை விளக்கியும், இராம நாமத்தின் மகிமையையும், காந்திஜியின் ஆதாரக் கல்வித் திட்டத்தின் அருமையையும் அழகாக விளக்கியுள்ளார். அடுத்து அறிவு வளர்ச்சியில் ஐந்து படிகள் என்ற கட்டு

ரையில் ''முரண்பட்ட சிந்தனைகள் பல தோன்றி ஒன்றை யொன்று அழித்துக் கொண்டு வெற்றி வாய்ப்புக்களை இழக்கும்படிச் செய்வதற்குக் காரணம், தெளிவான கேள்வி உதிக்காமையே ஆகும்'' என்ற கருத்து சமுதாய வளர்ச்சிக்கு வலுவூட்டும் பொலிவான கருத்தாக மிளிர் கிறது. பண்பட்ட நிலம் பயிர்த் தொழிலுக்கு ஏற்றது; பண்பட்ட உள்ளங்களில் தான் நற்சிந்தனை மூலம் நல்ல கேள்விகள் உதயமாகும்.

கேள்வி, தவம், அன்பு, தர்மம், இன்பம் ஆகிய படி நிலை களில் அறிவுவளரும் என்ற சித்தாந்தக் கருத்துக்களைத் தேவையான இடங்களில் சிந்தி ஒரு கட்டுரைக்கும் மறு கட்டுரைக்கும் தொடர்புள்ள செய்திகளைப் பின்னிப் பிணைத்து எழுதிய அருமையான படைப்பாகும். மேல் நாட்டுப் பழமொழிகள், உவமைகள் ஆகியவை பொருத்த மான இடங்களில் 'பொதிந்து உடல்நோயைப் போக்கும் மருந்து போல இந்நூல் உள்ள நோயாகிய அறியாமையை நீக்கும் அருமருந்தன்ன இலக்கியம் ஆகும். ''பாரத தேச மென்று தோள் கொட்ட, பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்ய'' ஒவ்வொரு ஆசிரியரும் வாங்கிப் படிக்க வேண்டிய நூலாகும் இது.

ஆசிரியர் திரு. ஸ்ரீராமுலு தேசிகன் அவர்களின் சீரிய பணி தொடரட்டும்; அவரின் சிந்தனை மலர்கள் இன்னும் பல நூல்களாக மலர்ந்து மணம் வீசட்டும்! வாழ்க அவரின் புகழ்!

அவரின் படைப்புகளை அச்சுப் பதித்து ஆன்ற பல உதவி செய்து வரும் புதுச்செந்நெல்குளம் ஸ்ரீ கிருஷ்ணா பதிப்பகத்தார்க்கு என் நெஞ்சார்ந்த வாழ்த்துக்கள் உரித் தாகும். !

திருவில்லிபுத்தூர்

அன்புள்ள

**ஆர். எஸ். கோமதிநாயகம்**

# 1. ஆலயமணியின் ஓசை

'மனம்' என்ற புண்ணிய பூமியில் கட்டப்பட்ட ஆலயம் — மானுட உடம்பு. அதில் தொங்க விடப்பட்டுள்ள மணி — அறிவு. அந்த மணியை அடித்து ஒலி எழுப்பும் கருவி — குணம்.

நற்குணத்தைப் பொறுத்து நல்லறிவு செயல்படும்.

சர்ப்பத்தின் தலையில் ரத்தினம் இருந்தும் பயனில்லை. நற்குணமில்லாத கல்வியாளனிடம் நல்லறிவு இருந்தும் பயனில்லை. அது செயல்படாது.

வக்ர புத்தி ஏற்படுவது — அதிகார வெறியால். தர்மம், சத்தியம் மறப்பது — ஆணவ வெறியால்.

ஆட்டுக் கோனான் குச்சியை ஆட்டி மந்தையைச் சரியான வழியில் செலுத்துவதைப் போல், இறைவன் தன் கருணையால் மானுட அறிவைச் சரியான வழியில் செலுத்தும் பொழுது, அவ்வெறிகள் ஏற்படாது.

மானுட இயக்கத்திற்குக் காரண வஸ்து அறிவுதான். அறிவு ஒன்றே வேதங்கள் கூறும் தெய்வம் என்பார் பாரதியார். 'காரண வஸ்துவே தியானிக்கத் தக்கது' என்று வேதம் கூறும்.

எத் துறையிலீடுபட்டாலும் தமது கருத்துக்களுடன் இணங்காதவர்களை அடக்க வேண்டும்; அமுக்க வேண்டும்; தேய்த்து விட வேண்டும் என்ற இரைச்சல்களை எழுப்பிக் கொண்டிருக்கும் உள்ளம், நல்ல உள்ளம் அல்ல.

இணங்கியவர்களை ஆண்மை கெட்ட அடிமைகளாக, பிறர் வசப்பட்ட பொம்மைகளைப் போல் ஆட்டிக் கொண்டிருக்கும் உள்ளமும் நல்ல உள்ளம் அல்ல.

இணங்கினாலும், இணங்காவிட்டாலும் அவர்களைப் பெருந்தன்மையுடன் மரியாதையுணர்வோடு நடத்தும் உள்ளமே, நல்ல உள்ளமாகும்.

உதார சிந்தையுடன் அவர்களோடு வாழ வழிவகுக்கும் உள்ளமே, நல்ல உள்ளமாகும்.

அந்த நல்ல உள்ளத்தில் அதிஉன்னத அறிவு தோன்றும்.

நிறத்னைதப் பலவிதமாக மாற்றிக் கொண்டாலும் வைடூர்யக் கல்லானது தன் தன்மையை மாற்றிக் கொள்ளாது.

அது மாதிரி உன்னத அறிவு சந்தர்ப்பங்களுக்கேற்பப் பலவித செயல்களில், பலவித கோணங்களில் ஈடுபட்டாலும் 'பற்றற்ற நிலை' என்ற தன் தன்மையை மாற்றிக் கொள்ளாது.

சர்வமிகு நூலறிஞர்களும் வறட்டுத் தத்துவ ஞானிகளும் புறக்கணிக்கும் நிலையில், தர்ம நியதிக்குக் கீழ்ப்படிந்து இறையுணர்வுடையவராய் ஆகும் நிலைக்கு மனிதனை வழி நடத்தும் அறிவே — உன்னத அறிவு.

அந்த உன்னத அறிவை வழங்கும் கல்வி — அம்பண் கண்ட கல்வி. அதுவே மகாத்மாஜி கண்ட ஆதாரக் கல்வியுமாகும்.

சுக்ல பட்சத்துச் சந்திரன் போலக் கலை வளர்ச்சி பெற்றுக் கலா சமுத்திரமாகக் கண்ணியமான முறையில்

வாழ்வாங்கு வாழ, அக்கல்வியானது ஊன்றுகோலாக அமையும்.

அது மனித குலத்திற்குக் கிடைத்த ஒரு பெரும் வரப் பிரசாதமாகும்.

ஆனால் அக் கல்வியைத் தத்துவ விசாரங்களின் ஒரு மொழியுரையாக மட்டுமே ஆராய்ந்தால் நேரம் வீணாகும். நற்பலனைத் தராது.

ஆக்க வாழ்விற்கு அறிவுப் பூர்வமானது என்ற நம்பிக் கையில் ஆராய்ந்தால் நேரம் வீணாகாது, நற்பலனைத் தராமல் போகாது.

ஆலய மணியின் ஓசையில் இறைவனைத் தரிசிப்பதைப் போல், ஆன்மகுரு அளித்த அறிவொளியில் ஆன்ம நாய கனைத் தரிசித்தேன்.

அதன் பயனாகக் கடந்த காலத்தில் அடியேன் அனுப வித்த உண்மையான அனுபவங்களின் மூலம் கற்றுக்கொண்ட பாடங்கள், இந்நூலின் அடிப்படைக் கருத்துக்கள்.

கருத்துக்களை நடைமுறையில் கடைப்பிடிக்கப் போதிய மனஉறுதி பெறப் பயிற்சி செய்கின்றேன்.

போலி வாழ்க்கைக் கொள்கைகளைக் கடைப் பிடித்தும், பதவியைக் கொண்டு மனிதனை எடை போட்டுப் பழகுவது அறிவின் சாமர்த்தியம் என்ற எண்ணங்கொண்டவர் களுக்கும் இந்நூலின் கருத்துக்கள் பிடிக்காமலும் இருக் கலாம்.

இருந்தபோதிலும் அவைகளை அலட்சியம் செய்து தள்ளிவிடாதீர்கள்.

'ஒரு பொருளை ஏழாண்டு காலம் வைத்திருங்கள்; அதற்கு ஓர் உபயோகம் இருப்பதைக் காண்பீர்கள்', என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி.

அந்தப் பழமொழிக்கேற்ப சில ஆண்டுகளுக்கு ஒரு முறை மீண்டும் இந்நூலைப் பொழுதுபோக்கு இலக்கிய மாகக் கருதிப் படிக்காமல் மனம் ஊன்றிப் படித்துப் பாருங்கள்.

அப்பொழுது இந்நூலின் கருத்துக்கள் அறிவைத் தொடும்.

இந்நூலை வரிவிடாமல் படித்து, மனம் திறந்து பாராட்டி உற்சாகப்படுத்தி மதிப்புரையளித்து உதவிய ஆன்மீகச் செல்வரும் தொழிலதிபருமான உயர்திரு T. R. **தினகரன்** B.E. (Mech.), முத்தமிழ் வித்தகி மதிப்புமிகு பேரா சிரியை டாக்டர். **சரஸ்வதி இராமநாதன்** M A.,Ph.D., மதிப்பு மிகு பேராசிரியர் டாக்டர். **நா. பாலுசாமி** M.A.,B.L.,M.Litt., Ph.D., 'கிராம ராஜ்யம்' பத்திரிக்கை ஆசிரியர் மதிப்புமிகு **வி. செல்வராஜ்** B.A.,B.T., பள்ளித் துணை ஆய்வாளர் மதிப்பு மிகு புலவர் **ஆர். எஸ் கோமதிநாயகம்** M.A ,B.Ed., ஆகியோர் களுக்கு அடியேனது இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறித்த காலத்தில் மிக நல்லமுறையில் அச்சிட்டுக் கொடுத்துதவிய மதுரை வைகை அச்சகத்தாருக்கு நன்றி கலந்த வணக்கம் உரித்தாகும்.

அடியேனது சிந்தனைச் செடியில் பூத்த மலர்கள் அடுத் தவர்களுடைய சிரசில் வாடா மலர்களாக என்றென்றும் வாசனையளித்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும் பினேன்.

நூலாக அமையக் கிறுக்கினேன். கிறுக்கியது நூலானது. அப்படியானால் குறுக்கே நின்று அதைத் திருத்தியவன் யார்?

வேறு யாருமல்ல. அற்பப் புல்லையும் அஸ்திரமாகச் செலுத்திக் காகாசூரனை வென்று, அவனை செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்ட அந்த சீதாராமபிரானே யாவான்.

அவன் ஆதிக்கத்தில் அடியேனது ஊனுடம்பாகிய ஆலயமணியின் ஒலியினது அதிர்வுகளின் கலப்பே — இந்நூல்.

வாசகர்களின் சிந்தனை வட்டத்தில் இந்த அதிர்வுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்க, அந்த சீதாராம பிரானையே வணங்குகின்றேன். வணக்கம்.

ஸ்ரீ ராமார்ப்பணம்

ராம மந்திரம் அன்பன்
புதுச்செந்நெல்குளம் - 626 137 **A. ஸ்ரீராமுலு தேசிகன்**
(வழி) ஸ்ரீவில்லிபுத்தூர்.

# 2. பாரத தேவியின் இதயக் குமுறல்

மகப்பேறு உண்டான காலத்தில் மாதாவிற்கு உண்டான மகிழ்ச்சியைவிட அம் மகன் சான்றோன் என்ற சொல்லைக் கேட்கும் பொழுது அதிக மகிழ்ச்சி உண்டாகும் என்பது வள்ளுவரின் கருத்து.

இது எத்தனை உண்மையோ, அத்தனை இதன் எதிரிடைக் கருத்தும் உண்மையாகும்.

மகன் சான்றோன் அல்லன் என்ற சொல்லைக் கேட்கும் பொழுது உண்டாகும் மாதாவின் துயரம், அவன் இறக்கும் பொழுது உண்டாகும் துயரத்தைவிடப் பன்மடங்கு அதிகத் துயரமடையுமல்லவா?

துயரம் அடையும் என்ற சிந்தனையில் தம் கருத்தைச் செலுத்துவார் பாரதியார்.

''மாயும் பொழுதிற் பெரிதழுங்குந் தன்மகனைக்
கீழோன் எனக் கேட்ட தாய்''.

'அந்தோ! வியாசர், சங்கரர், இராமானுஜர், புத்தர், காந்திமகான்களையும், இராமன், பார்த்தன், சிவாஜி, பிரதாப்சிங் முதலிய வீரர்களையும் பெற்ற என் வயிற்றிலே இப்போது ஆண்மையிழந்து, சுயமதிப்பற்று, தேசாபிமானத்தின் பெயரறியாமல் நோய், மிடி, அறியாமை என்ற படுகுழிகளிலே வீழ்ந்து கிடக்கும் பேதைகளா வந்து பிறக்க வேண்டும்?

நெஞ்சிலுரமுமின்றி, நேர்மைத்திறனுமின்றி வஞ்சனைச் சொற்களை வாரி வழங்கும் வாய்ச்சொல் வீரர்களாகவா வந்து பிறக்க வேண்டும்?

புத்திரர்களின் நிலைமை இவ்வாறிருக்க, எனது குமாரிகளின் கதியை நினைக்கும்பொழுது வயிறு பொங்குகின்றது.

மைத்ரேயியும் சீதாப் பிராட்டியும் பிறந்த நாட்டிலே சூரிய கிரணம் பார்த்தறியாத புழுக்களைப் போன்று கல்வி, அறிவு முதலிய யாதுமில்லாத பெண்களும் உலாவுகிறார்களே!

'நமது தேசத்தின் ஆதார சக்திகளாகிய மாதர்களின் இதயமும் ஆன்மாவும் இருளடைந்துபோகவிடுவதைக் காட்டிலும் பாதகச் செயல் வேறில்லை. ஞானக் கிரணங்கள் அவர்களது ஆன்மாவில் தாக்குமாறு செய்தாலன்றி, வேறு விமோசனமே கிடையாதென்று மிகத் தெளிவாகக் கூறுவேன்', என்கிறார் பாரதியார்.

அதற்கு மனவளத்தைப் பெருக்கும் வாய்ப்புக்களை அளிக்க வேண்டும். சான்றோன் ஆக்கும் பயிற்சியினைக் கொடுக்க வேண்டும். ஆன்மீகக் கல்வியைப் பயிற்றுவிக்க வேண்டும்.

மனநிலையைக் காப்பதற்கு மேல் உலகில் வேறு எந்தப் பொருள் உள்ளது?

பக்திக்கும் மரியாதைக்கும் உரிய இடம் கோயில் மட்டுமல்ல. அவரவர் பணிபுரியும் இடங்களுமே.

கோயில்களைப் புனிதமாகக் கருதுவதுபோல், கல்வியைப் பயிற்றுவிக்கும் பள்ளிகளையும் புனிதமாகக் கருத வேண்டும்.

அப் பள்ளிகளில் அறிகின்ற சக்தியுள்ள கண்களுக்குப் புரிகின்ற சக்திகளைக் கொடுப்பதற்கு நன்கு பயிற்சியும் இறையருளும் பெற்ற நல்ல குரு பணியாற்ற வேண்டும்.

சிறு ஊற்றாக நீர் கசிந்து வந்தாலும் பரவாயில்லை; அந்நீர் நல்ல குடிநீராக இருக்க வேண்டும்.

சிறு குடிசையாக இருந்தாலும் பரவாயில்லை; அங்கு வாழ்பவர்கள் மன அமைதியுடன் வாழ வேண்டும்.

அது போல் பள்ளிக்கூடம் சிறியதாக இருந்தாலும் பரவாயில்லை; அங்கு கற்பிக்கும் குருவினுடைய உள்ளம் பெரியதாக, விசாலமாக இருக்க வேண்டும்.

எந்தக் காலத்திலும் அந்த குருவினுடைய உள்ளத்தை உள்ளபடி அறிய பலர் முயற்சிப்பார்கள். அக்காலத்தில் வெட்கப்படக் கூடிய செயல் எதுவும் இல்லாதபடி அவர் தன் நடத்தையைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

அப்படிப்பட்ட நல்ல குருவையும் அவர் கற்பிக்கும் பள்ளியையும், கோயிலையும் இறைவனையும் புனிதமாகக் கருதுவது போல், புனிதமாகக் கருத வேண்டும்.

'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்பது முதுமொழி.

'பாரத தேச மக்கள்', என்று தோள் கொட்டிப் பெருமிதமாக வாழவேண்டுமானால், பள்ளிகளைக் கோயில்களாகச் செய்ய வேண்டுமென்று கூறுவார் பாரதியார்.

''பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம் எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்.''

மழையின்றித் தாவரங்கள் வளராது. ஆயினும் உலகில் வளர்க்கப்படும் பலவிதமான தாவர இனங்களின் வளர்ச்சிக்கு மழை பொறுப்பாளியல்ல.

அது மாதிரி நல்ல குருவின் உதவியில்லாமல் நல்லறிவு வளராது. ஆயினும் பள்ளியில் பயிலும் பலவிதமான இயல்புள்ள மாணவர்களின் அறிவாற்றல்களின் வளர்ச்சிக்கு அந்த நல்ல குரு பொறுப்பாளியல்ல.

மாணவர்களின் அயராத உழைப்பே முழுப்பொறுப்பாகும்.

# 3. பாரதியின் இதயம்

இரசம் பூசப்பட்ட கண்ணாடியே அதனைப் பார்ப்ப வர்களின் உருவத்தைக் காட்டும்.

அதுபோல் ஒருவர் செய்யும் செயல்களே அவருடைய இதயக் கருத்துக்களை வெளிப்படுத்தும். கர்மம், சுபா வத்தைக் காட்டும் கண்ணாடி.

கவர்ச்சி ஆட்டத்திலீடுபடும் ஆரணங்குகளை அரங்கத் திலிருந்து உடனே அகற்றுவர் ஆன்றோர்.

அது போல் இப்புவியில் வாழும் பொழுதே கவர்ச்சி யரங்கத்தில் கட்டிலடங்காமல் களி நடனங்கள் புரியும் புலனுறுப்புகளை உடனே அகற்ற வேண்டும்.

அதற்கு விருப்பு வெறுப்பற்ற தூய்மையான அறிவில் வாழ்ந்து முக்தி நிலை பெற வேண்டும். அறிவை நடத்திச் செல்லும் காலத்தை வெல்ல வேண்டும். வென்றதன் அறி குறியாகப் பெருமிதமுடன் சங்கு ஊதவேண்டும் என்பதே பாரதியின் இதயங் கொண்ட கருத்தாகும்.

''இத் தரை மீதினிலேயிந்த நாளினில்
இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவ ராமென்றிங் கூதேடா சங்கம்''.

சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் குழப்பமேற்பட்டால், அதில் முழுமையான அறிவு பெற்றவரின் உதவியை நாட வேண்டும்.

சட்ட நிபுணரை அணுக வேண்டும், சட்ட சம்பந்த மானப் பிரச்சினைகள் ஏற்பட்டால்.

மருத்துவரை நாடவேண்டும், நோய் வந்தால்.

அதுபோல் மனதிலே குழப்பங்கள் ஏற்பட்டால், ஆன்மீக நூல்களை நாட வேண்டும்.

கருத்தளவில் வாழ்வின் உயர்ந்த இலட்சியங்களை அறிந்துள்ள மனிதன், செயலளவில் அவைகளைக் கடைப் பிடிக்காமல் தடுமாறுகிறான்.

ஏன்? என்ற கேள்வி உதித்துச் சிந்தனையை ஆட்டிப் படைத்தது பாரதியாரை. அதனால் அவர் படித்தார் பகவத் கீதையை.

காமமும் கோபமும்தான் அதற்குக் காரணம் என்ற பதில் (3.37) கிடைத்தது.

உண்மை காணாத நிலையில் உள்ளத்திலேற்படும் மோகங்களே காமமும் கோபமும் என்பார் வள்ளுவர். (866)

அவைகளை இறைவன் அருளால் நீக்க முயற்சிப்பதே இறை வழிபாடுகளின் இலட்சியங்களாகும்.

'தன்னுடைய உருவ அழகில் உள்ளத்தைச் செலுத்து வதே அவைகளை நீக்கும் வழியாகும்', என்று கிருஷ்ணன் கீதையில் (4.11) அருளியதைத் தன் உள்ளத்தில் பதித்துக் கொண்டார் பாரதியார்.

தன்னைக் காதலியாகவும் கண்ணனைக் காதலனாகவும் பாவனை செய்துகொண்டு, அவன் உருவ அழகில் ஈடு பட்டார். அவன் காட்சியளித்து அருளியதை அவரே கூறுகிறார்.

# 4. கண்ணன் என் காதலன்

''திக்குத் தெரியாத காட்டில் — உனைத்
தேடித் தேடி இளைத்தேனே

.............................................

மதி வஞ்சித் திடுமகழிச் சுனைகள் — முட்கள்
மண்டித் துயர் கொடுக்கும் புதர்கள் — ஒரு
(திக்குத்)

ஆசை பெற விழிக்கும் மான்கள் — உள்ளம்
அஞ்சக் குரல் பழகும் புலிகள் — நல்ல
நேசக் கவிதை சொல்லும் பறவை — அங்கு
நீண்டே படுத்திருக்கும் பாம்பு — ஒரு''
(திக்குத்)

[குறிப்பு : காடு — இல்லற வாழ்வையும்; சுனைகள், புதர்கள் — உலகியலின்பங்களையும்; மான்கள் — பெண்களின் கண்களையும் குறிக்கும். அறிவு முதிர்ச்சியடையாதவர்களுடைய பேச்சைப் புலிகளும், ஆத்ம தத்துவ ஞானம் அடையவிடாமல் தடுக்கும் புலனுணர்வுகளைப் பாம்பும் குறிக்கும்.]

காட்டிலே ஓர் அழகான இளம் பெண் தனித்துத் திரிந்து கொண்டிருந்தால், வேட்டையாட வந்த வேடன் கண்டு விட்டால், அவளோடு இன்பம் அனுபவிக்கத் துடிப்பான்; இன் சொற்கள் பேசி இணங்க வைக்க முயற்சிப்பான்.

அது போல் 'சம்சாரம்' என்ற காட்டிலே கண்ணனின் காதலி தனது காதலனைத் தேடி அலைந்து திரிந்து கொண்டிருக்கும்பொழுது 'மன்மதன்' என்ற வேடன் இன் சொற்கள் மூலம் பேசித் தன் இச்சைக்கு இணங்க வைக்க முயற்சித்தான். அவனிடம் அவள் கூறுவாள் :

''அண்ணா, உனதடியில் வீழ்வேன் — எனை
அஞ்சக் கொடுமை சொல்ல வேண்டா — பிறன்
கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை — உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமோ?''

[குறிப்பு : உருவ அழகிலீடுபட்டு, அதன்மூலம் இறை யுணர்வில் உள்ளம் திளைத்து விட்டால், காம உணர்வு கள் அவ்வுள்ளத்தைப் பார்க்க முடியாது என்ற கீதாசார் யன் கருத்தைக் கடைப்பிடித்துத் தான் பயனடைந்ததைக் குறிப்புணர்த்துகிறார், பாரதியார்.]

மன்மதன் கண்ணனின் காதலியை விட்டபாடில்லை. அவளைத் தொடர்ந்து வந்து மீண்டும் அவளிடம் கூறினான் :

''ஏடீ சாத்திரங்கள் வேண்டேன் — நினது
இன்பம் வேண்டுமடி, கனியே! நின்றன்
மோடி கிறுக்கு தடி தலையை — நல்ல
மொந்தைப் பழைய கள்ளைப் போலே.''

— என்று அந்த மன்மதன் நல்ல மட்பாண்டத்தி லுள்ள பழைய கள்ளைக் குடித்தவனுடைய தலை எப்படிச் சுற்றுமோ அப்படி என் தலை உனது அழகான தோற்றத்தைக் கண்டு சுற்றுகிறதென்று அவளிடம் கூறினான்.

'சினிமா' என்ற கடலில் எழும் காம அலைகளால் அபகரிக்கப்பட்டவர்களுக்கு 'மலிவு விலையில் மது' என்ற குடுக்கை கட்டி, அவர்களைக் கரையேற்ற முயற்சிப்பவர்களுடைய செயல்களைப் போன்றது, அந்த மன்மதனின் செயல்.

கண்ணனின் காதலியா அதற்கெல்லாம் மயங்குவாள்? அவள் தன் காதுகளால் அந்த மன்மதனின் காதல் சொற்களை கேட்டாள். உடனே அவள் அலறி விழுந்தாள். வேடனை (மன்மதனை)க் காணவில்லை. அறிவு தெளிவு பெற்றாள்; கண்ணனைக் கண்டாள்.

"காதா விந்தவுரை கேட்டேன் — 'அட
கண்ணா !' வென்றலறி வீழ்ந்தேன் — மிகப்
போதாக விஃலை யிதற் குள்ளே — என்றன்
போதந் தெளிய நினைக் கண்டேன்."

(போதம் = அறிவு)

காதலி, அவள் காதலன் கண்ணனிடம் கூறுவாள்:

"கண்ணா ! வேட னெங்கு போனான்?
— உனைக்
கண்டே யலறிவிழுந் தானோ? — மணி
வண்ணா ! என தபயக் குரலில் — எனை
வாழ்விக்க வந்த அருள் வாழி !"

ஆம் ! பாரதியை வாழ்விக்க வந்த அருளாளன், அந்த கண்ணனெம்பெருமானே.

அதனால் அவருக்குப் பொழுதெல்லாம் அவனது பேரருளின் நெறியிலே நாட்டம் ஏற்பட்டது.

அந்நாட்டத்தின் பயனால் அவருக்கு அறிவிலே தெளிவு; நெஞ்சிலே உறுதி, அகத்திலே அன்பினோர் வெள்ளம்,

பொறிகளின் மீது தனியரசாணை, கரும யோகத்தில் நிலைத்திடல் போன்ற அரிய பண்புகள் ஏற்பட்டன.

இளமையிலேயே அப்பண்புகள் மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கப்பட வேண்டுமென்ற அவாவினால், 'பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம்' என்று பாடினார் பாரதியார்.

பொழுதெல்லாம் ராம நாமத்தில் நாட்டங் கொண்டு அதனை ஜபித்ததன் பயனால் பல அபூர்வான ஆன்மீக ஆற்றல்களைப் பெற்று வாழ்ந்த மகாத்மாஜி, ஆதாரக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்து பிரார்த்தனை, பஜனை மூலம் இளமையிலேயே மாணவர்களுக்குச் சுய கட்டுப்பாட்டுத் திறனை வளர்க்க வேண்டுமென்று வற்புறுத்தினார்.

'விருப்பு வெறுப்பற்ற நிலையினில் சுத்த அறிவினில் தூயவராக வாழ வேண்டுமானால், கண்ணன் வாழ்விக்க வேண்டும். அதற்கு அவனிடம் அபயக் குரல் எழுப்பி அடைக்கலமடைய வேண்டும். அடைந்தால் அவனுடைய அருள் வாக்குகள் புரிந்து அறிவிலே தெளிவு ஏற்படும்' என்பது பாரதியின் இதயங் கொண்ட கருத்தாகும்.

அக்கருத்தினை வழங்கும் தூய்மையான அறிவை வளர்க்கும் கல்வி முறையே ஐந்து படிகளின் மூலம் அறிவைப் பரிணாம வளர்ச்சியடையச் செய்யும் கம்பன் கண்ட கல்வி என்று கூறினால், அது மிகையல்ல.

அப்படிகளின் சிறப்புக்களை சிரத்தையோடு, அதாவது முழு நம்பிக்கையில் பிறக்கும் ஊக்கத்தோடு, மனம் ஊன்றிப் படிப்பது, நல் அறிவைத் தேடுபவர்களின் இன்றியமையாத கடமையாகும்.

# 5. கம்பன் கண்ட கல்வி

உடலாலும் உள்ளத்தாலும் மக்களுக்கு உழைப்பது தேசபக்தி. உடலாலும் உள்ளத்தாலும் உயிராலும் இறைவன் திருவருள் பெற உழைப்பது தெய்வ பக்தி.

தெய்வ பக்தி இல்லாவிடில் மனச்சாட்சி செயல்படாது. மனச்சாட்சியில்லாத நிலையில் தேசபக்தி உள்ளத்தில் வேரூன்றாது.

பறவைக்கு இரண்டு சிறகுகள் போல, வண்டிக்கு இரண்டு சக்கரங்கள் போல, நம் பாரத மக்கள் சிறுமை கண்டு பொங்க வேண்டுமானால், எளிமை கண்டு இரங்க வேண்டுமானால், வீறுடன் விளங்க வேண்டுமானால் தமது இரு கண்களையும் பாதுகாப்பதைப்போல் தெய்வபக்தியை யும் தேசபக்தியையும் ஒருங்கே பாதுகாக்க வேண்டும்.

பாதுகாப்பதற்குப் பயிற்சியளிக்கும் கல்வி, ஐந்து படி களைக் கொண்ட கம்பன் கண்ட கல்வியாகும்.

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் — என்ற மூன்று தாரக மணி மந்திரங்களைக் கொண்ட மகாத்மாஜி கண்ட கல்வியே, கம்பன் கண்ட கல்வியாகும்.

1) கேள்வி, 2) தவம், 3) அன்பு, 4) தருமம், 5) இன்பம் ஆகிய ஐந்து படிகளே, கம்பன் கண்ட கல்வி யிலுள்ள படிகளாகும்.

இப்படிகளின் மூலம் அறிவானது பரிணாம வளர்ச்சி பெறும்பொழுது செயல்கள் மூலம் அது பரிமளித்து இன்பம் அளிக்கும்.

இசை வல்லுநர் இசை பாடும்பொழுதே தாம் எழுப்பிய இசையில் இன்பம் அனுபவிப்பதைப் போல், செயல்களைச் செய்யும் ஆற்றலை அனுபவிக்கும் பொழுதே இன்பம்காணும் தன்மையைப் பெற்று விடும், இந்த ஐந்து படிகளின் மூலம் பெறும் அறிவு. அந்த அறிவு பயன் கருதாது கர்மத்தில் ஈடுபடும்.

சுரண்டலில்லாத புலனடக்கமுள்ள எளிய வாழ்வினை அது மேற்கொள்ளும். சுகபோக வெளிச்சத்தில் உலாவுவதே உன்னதமான பண்பாடு என்ற மனப்போக்கை அது மாற்றிவிடும்.

ஒப்பற்ற அந்த் உண்மையான அறிவு உண்டாகும் கல்வியானது, தமிழ்நாட்டு மக்களிடையே அமைந்துள்ளது. அதனால் மற்ற நாடுகளைவிடச் சிறந்து விளங்குகிறது. கம்ப நாட்டாழ்வார் இங்கு பிறந்தமையே அதற்கு காரணமாகும் என்று பெருமிதத்துடன் கூறுவார் பாரதியார்.

> ''கல்வி சிறந்த தமிழ்நாடு — புகழ்க்
> கம்பன் பிறந்த தமிழ் நாடு.''

மரக்கன்று நட்டினால் அது வளர வளர கிளைகள் பல பிரியும்; இலைகள் உண்டாகும். பின் மொட்டுக்கள் (அரும்புகள்) முளைக்கும். அவைகள் மலர்களாக மலரும். அதன் பின்னர் காய்களுண்டாகிக் கனிகளாகும். அக் கனிகள் மரம் வைத்தவனுக்கும் இன்பம் அளிக்கும். சமுதாய மக்களுக்கும் இன்பம் அளிக்கும்.

அக் கனிகளைப் போன்று கல்வியறிவானது கற்றவனுக்கும் இன்பம் அளிக்க வேண்டும், சமுதாய மக்களுக்கும் இன்பம் அளிக்க வேண்டும்.

அந்த நோக்கோடு அறிவு ஐந்து படிகளின் மூலம் வளர வேண்டுமென்பதற்காக மரத்தோடு ஒப்பிட்டுக் கூறுகிறார் கம்ப நாட்டாழ்வார்.

கிளைகளைக் கேள்விகளுக்கும், இலைகளைத் தவத்திற்கும், மொட்டுக்களை அன்பிற்கும், மலர்களைத் தருமத்திற்கும், கனிகளை இன்பத்திற்கும் ஒப்பிடுகிறார்.

ஒப்பற்ற கல்வியாகிய மரக்கன்று மானுட உள்ளமாகிய நிலத்தில் முளைத்து வளர்கிறது.

அதில் பிரிந்து வளரும் பல **கிளைகளே**, கற்றதுக்கு ஆதாரமாகத் தோன்றும் **கேள்விகளாகும்.**

அக் கிளைகளில் தோன்றும் **இலைகளே**, காய்தல் உவத்தலின்றி ஒரு பொருட்கண் ஆயும் உண்மையான அறிவை உண்டாக்கும் **தவமாகும்.**

அவைகளில் உண்டான **மொட்டுக்கள்**, மானுட வாழ்வின் இலட்சியமான இறைவனை அடைய உதவும் உயிரினங்களின் சேவைக்கு ஆதாரமாகத் தோன்றும் உண்மையான **அன்பாகும்.**

மொட்டுக்களிலிருந்து காய்கள் தோன்றி அவைகள் கனிந்த நிலையிலுண்டாகும் **கனிகள்**, மானுட உணர்வுகள் இயல்பாகவே நோக்கவேண்டிய **தருமமாகும்.**

ஆறுகள் இயல்பாகவே கடலை நோக்கிப் பாய்வதைப் போல், தாமரை மலர் இயல்பாகவே சூரியனை நோக்கி

இருப்பதைப்போல், ஆயுள் முடிவில் உயிர்கள் இயல்பாகவே யமனை நோக்கி எதிர்பார்த்திருப்பதைப் போல், மானுட உணர்வுகள் இயல்பாகவே தருமத்தை நோக்கியே இருக்க வேண்டும்.

அப்படி இருக்கும் அறிவாளியே, **கனிகள் உண்ணும்** பொழுது இன்பமடைவதைப்போல் வாழ்வில் எப்பொழுதும் **இன்பமுடன்** வாழ்வான்.

இதோ! கல்விக் கடலாம் கவிச்சக்கரவர்த்தி கம்ப நாட்டாழ்வாரின் இன்புறு சிந்தனையில் உருவான கவிதை யினைப் பருகுவோம்:

''ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து, எண் இல் கேள்வி
ஆகும் முதல் திண்பணை போக்கி, அருந் தவத்தின்
சாகம் தழைத்து, அன்பு அரும்பி, தருமம் மலர்ந்து
போகக் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே.''
(பாலகாண்டம் 75)

இன்பமடைவது — மரத்தில் உருவான கனிகளால்; அக்கனிகளை விற்ற பொருள்களால் அல்ல.

அது போல் செய்யும் செயல்களில் இன்பமடைவது — செயல்களைச் செய்யும் ஆற்றலால்; கிடைக்கும் பலனால் அல்ல.

இந்த மர்மத்தை இறைவனருளால் உணர்ந்தவர்கள் அதிவிரைவில் அறிவிலே தெளிவடைவார்கள்.

உணராதவர்கள் கவர்ச்சியையும், கைதட்டல்களையும், பாராட்டையும் எதிர்பார்த்துப் பேசிக்கொண்டு திரிவார் கள்.

செயல் செய்யும் ஆற்றலும், செயலுக்குக் கிடைக்கும் பலனும் வெவ்வேறல்ல. ஒன்றுதான். இன்றைய செயல் களைச் செய்யும் ஆற்றல்களை, எதிர்காலச் சூழ்நிலையில் வைத்துக் கூறுவதுதான், செயலின் பலன் என்று சொல் லப்படும்.

'பலன் எதிர்காலத்தில் பழுக்கப்போகும் கனி'.

பலனை எதிர்பார்த்துக் கொண்டு செயல் செய்யும் காலத்தை உபயோகமற்ற கற்பனைக் கனவுகளில் வீணாக்கி விடக்கூடாது. பலன் கிடைக்குமோ கிடைக் காதோ என்ற அச்சத்தில் செயல் செய்யும் ஆற்றலைச் சிதைத்துவிடக்கூடாது.

செயல் செய்பவனது முழு ஆற்றலையும் செய்யும் செயலிலேயே, செயல் செய்யும் காலத்திலேயே (நிகழ் காலத் திலேயே) நன்றாகப் பயன்படுத்த வேண்டும். செய்யும் செயலில் ஒரே சிந்தனையில் உள்ளம் ஒன்றிவிட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தும் நோக்கோடுதான், 'கருமத்தைச் செய்; பலனை எதிர்பார்க்காதே' என்று கீதை கூறுகிறது. எங்கு கர்மயோகம் நிகழ்கிறதோ, அங்கு இறைவன் வாசம் செய்கிறான் என்கிறது வேதம்.

கம்பன் காட்டும் ஐந்து படிகளில் வளர்ச்சியடைந்த அறிவு, கர்மயோகத்திலீடுபடும்.

ஐந்து படிகளில் வளர்ச்சியடையாத அறிவு, வெறும் போலித்தனமான அறிவே. அதைப் பெற்றவனும் மன நிறைவு பெறமுடியாது; சமுதாயமும் நிலைத்த பயனைப் பெறமுடியாது.

இசைத்தட்டு-அரை நிர்வாண நடனங்கள் ஓட்டி விடலாம் — நல்ல பரத நாட்டிய நடனங்களை; மெல்லிசைக் கதம்பம் விரட்டி விடலாம் — நல்ல இசைக் கச்சேரிகளை; நல்ல தரமிக்க, கருத்துக்கள் செறிந்த எழுத்துக்களை துரத்தி விடலாம் — ஆபாச எழுத்துக்கள்.

ஆயினும் போலிகள் நிலைக்காது; நிலைத்ததாக வரலாறுகள் இல்லை.

'நன்னெறியை வளர்ப்பது தான் கல்வியின் நோக்கம்', என்று ஹக்ஸ்லி என்ற தத்துவ ஞானி கூறுவார்.

'தன்னைத் தானே பரிசுத்தமாக்கிக் கொள்வது தான் ஒருவன் தன் தேசத்திற்குச் செய்யக் கூடிய சிறந்த சேவை யாகும்', என்று மகாத்மாஜி கூறுவார். (நவஜீவன்- 8-7-1928)

நன்னெறியை வளர்த்து சிறந்த சேவகனை உருவாக்க, அறிவு வளர வேண்டிய கேள்விகள், தவம், அன்பு, தருமம், இன்பம் ஆகிய ஐந்து படிகளின் சிறப்புக்களைத் தனித் தனியாக ஆராய்வோம்.

கட்டிடத்திற்குக் கடைக்கால் இன்றியமையாததைப் போல், அறிவு வளர்ச்சிக்கு இப்படிகள் இன்றியமையாத வைகளாகும்.

# 6. அறிவு வளர்ச்சியில் ஐந்து படிகள்

**6 (அ) கேள்விகள் :** அறிவியல் உலகிற்கு உண்மை அவசியம். அறிவு நோக்கிலிருந்து ஆராய்ந்து அலசிப் பார்க்கும் பொழுதே ஒரு பொருளின் உண்மை நிலையினை அறிய முடியும். அதற்கு உள்ளத்தில் இருந்த கேள்வி உதிக்க வேண்டும்.

சிந்தனையின் விளைவு அல்லது விளைவிற்கு ஆணிவேராக அமைவது உள்ளத்தில் எழும் கேள்வியேயாகும்.

முரண்பட்ட சிந்தனைகள் பல தோன்றி ஒன்றையொன்று அழித்துக்கொண்டு வெற்றி வாய்ப்புக்களை இழக்கும்படிச் செய்வதற்குக் காரணம், தெளிவான கேள்வி உதியாமையேயாகும்.

'ஒன்று மாற்றி ஒன்றைப் பிடிக்க முயன்று, இறுதியில் ஒன்றையும் பிடிக்காமல் சாவதற்குப் பெயரே வாழ்க்கை என்று கூறினான் ஒரு மேல்நாட்டு அறிஞன்.

அப்படிப்பட்ட வாழ்க்கை ஏற்படுவதற்குக் காரணம் - பரபரப்பு, வெறுப்புணர்ச்சி, பேராசை போன்ற மன கடுப்புகளின் மூலம் உருவாகும் பொருளற்ற கேள்விகளே யாகும்.

'பல கேள்விகளால் பலவாறாகக் கலங்கியுள்ள உள்ள எப்பொழுது ஆத்மாவிடத்து நிச்சலமாய், அசைவற்றதா நிற்குமோ, அப்பொழுது நீ யோகத்தைப் பெறுவாய்

என்று கூறுவான் கீதாசார்யன் (2.53). இதன் மூலம் செயலைச் செம்மையாகச் செய்வதற்கு உள்ளத்தில் உதிக்கும் கேள்வி மிக முக்கியமானது.

சரியாகச் சிந்திக்கும் திறனை வளர்ப்பது; காரிய காரணத் தொடர்புகளின் அடிப்படையில் பிரச்சினைகளைப் புரிந்து கொள்வது; அவைகளுக்குத் தர்க்க ரீதியான முடிவுகளைக் காண உதவுவது போன்ற செயல்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணங்களாக அமைவது, உள்ளத்தில் எழும் கேள்விகளேயாகும். தான் எண்ணிய காரியங்கள் தடைபடும் பொழுது, திடீரென்று மகிழ்ச்சி தரும் சம்பவங்கள் தோன்றி உற்சாகப்படுத்தும்பொழுது, சிக்கலான அனுபவங்களை எதிர்கொள்ளும்பொழுது கேள்விகள் உதிக்கும்.

வயதான ஒரு ஏழை பிரம்மச்சாரி இருந்தான். அவனுக்கோ கண்கள் குருடு. ஆனால் ராம பக்தன். அவனுடைய பக்தியினைக் கண்டு இரங்கி ராமபிரான் காட்சியளித்தான். 'ஒரே கேள்வியைக் கேட்டு வரம் பெற்றுக் கொள்; கண்டிப்பாக மறுகேள்வி கேட்கக் கூடாதென்றான்', ராமபிரான்.

கிழவனும் சரியென்று ஒப்புக்கொண்டு ஒரே கேள்வி கேட்டான்.

'ஏழு அடுக்கு மாளிகையில் தங்கக் கரண்டியால் என் பேரன் பால் குடிப்பதை எனது கண்களால் பார்க்க வேண்டும்' என்று ஒரே வரம் கேட்டான். வரம் கொடுத்து ராமபிரான் சென்று விட்டான்.

வீடு இல்லாதவனுக்கு வந்து விட்டது மாளிகை. பேரன் பிறக்க வேண்டுமானால் தான் கல்யாணம் முடிக்க

வேண்டும் அல்லவா? கிழவனுக்கு யார் பெண் கொடுப்பார்கள்? வர பலத்தால் இளமையும் வந்துவிட்டது. பால் குடிக்கும் கரண்டியே தங்கமான்னால் எவ்வளவு செல்வம் வரவேண்டும்? அவ்வளவு செல்வமும் வந்து விட்டது. பேரனைப் பார்ப்பதற்குக் கண்கள் வேண்டுமல்லவா? கண்களும் வந்துவிட்டன.

கிழவனுக்கு ராமநாம ஜெபத்தின் மகிமையால், தெளிவான ஒரே கேள்வி கேட்டதின் பயனால், மாளிகை, இளமை, செல்வம், கண்கள், இல்லற வாழ்வு இத்தனையும் பெற்றான்.

பக்தி நெறியிலீடுபட்டால் தெளிவான கேள்விகள் உதயமாகி, அறிவு தெளிவடையும்.

'நுண்கலைகளைக் கீழ்ச் சாதிக்காரனான உனக்குக் கற்றுத் தரமுடியாது' என்று கூறிய துரோணாச்சாரியாரை, வெறுக்கவில்லை ஏகலைவன். தன்னைக் கீழ்ச் சாதிக்காரன் என்றும் அவனை, அவனே நினைக்கவில்லை.

துரோணருடைய வடிவத்தையமைத்து, அதில் தனது ஒன்றுபட்ட சிந்தனையில் பக்தியைச் செலுத்தி வழிபட்டான். அச்சிலை முன் வில் வித்தைகளைப் பழகினான்.

ஆன்மீக குருவான அந்த துரோணாச்சாரியாருடைய அருளினால் ஏகலைவனுக்கு, 'இது ஏன் வந்தது? அது எப்படி வரும்?' போன்ற கேள்விகள் உருவாகி அவனது மூளையில் திறனாய்வு முறையை வளர்த்தன. அதன் பயனால் அவன் அர்ச்சுனனுக்கு நிகரான வில் வீரனாகத் திகழ்ந்தான்.

ஆன்மீகக் குருவின் அருளினால்தான் தெளிவான கேள்விகள் தோன்றும் என்று கூறுவார் திருவரங்கத் தமுதனார் என்ற இராமானுஜ தாசர்.

'எனது உள்ளம் நல்லது தீயது எது? என்று ஆராயும் ஞானத்தைப் பெறாமல், மிகக் கொடிய கர்மத்திலீடு பட்டுக் கொண்டிருந்தது. பொருவற்ற ஞானத்தினால் ஒன்றிலும் ஒரு நிலையில்லாமல் திரிந்துகொண்டு இருந்தது.

அப்பொழுது எனது ஆன்ம குரு ஒரு நொடிப் பொழு தில் என்னை ஒப்பற்ற கேள்வி வாய்ந்தவனாகச் செய் தார். அதனால் தமது திருவடிகள் பூமியில் தரிக்கும்படி நின்றார். எல்லாத் திசைகளிலும் யாவரும் ஒருமித்துப் பாராட்டும் குணங்களையுடையவரானார். அவர்தான் இராமானுஜர்' என்று கூறுகிறார், திருவரங்கத்தமுதனார்.

"........................................................ ஒரு பொழுதில்
பொருவற்ற கேள்வியனாக்கி நின்றா னென்ன புண்ணி
யனோ
தெரிவுற்ற கீர்த்தி ராமானுஜன் ................................"

எதிர்பாராத விதமாக வந்த ராம பாணம் தன் உடலில் பாய, அதனைப் பிடித்து இழுத்துப் பார்க்கும் பொழுது அதில் 'ராமநாமம்' பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டான் வாலி.

அந்த ராம நாம மகிமையால் அறிவிலே தெளிவு பெற்றான். பல கேள்விகளைக் கேட்டு ராமபிரானிடம் விடைகள் பெற்றான். முன்பு தான் புலனுணர்வுகளிலீடு பட்டுச் செய்த சிறுமைச் செயல்களுக்கு மன்னிக்கப் பிரார்த்தித்தான். இதனைக் கம்ப நாட்டாழ்வார்,

'செவியுறு கேள்விச் செல்வன் சென்னியினிறைஞ்சி சொன்னான்', என்கிறார்.

ராம நாம மகிமையினால் வாலி செவியுறு கேள்விச் செல்வனாகியதைப் போல் மகாத்மாஜியும் ஆனார்.

பெரிய விசயமோ, சிறிய விசயமோ சொல்பவரைப் பொருத்தே அது பெருமையுறும். விசயத்தைப் பொருத்துப் பெருமையுறாது.

'பல பிறவிகளுடைய முடிவிலே, ஞானியானவன் ''எல்லாம் வாஸுதேவன்'', என்று என்னை அடைகிறான். அந்த மகாத்மா கிடைப்பதற்கு மிக்க அருமை', என்று கூறிய கீதாசார்யன் வாக்கைக் (7-19) கடைப்பிடித்து வாழப் பிறந்தவரல்லவா மகாத்மாஜி.

எனவே அவர் தன் வீட்டு வேலைக்காரப் பெண் ரம்பாவையும் வாசுதேவ சொரூபமாகவே கண்டு அன்பும் மரியாதையும் அளித்து வந்தார். அவள் சிறுவயதில் அவருக்கு 'ராம நாம ஜெபம்' தொடங்கி வைத்தார். அதனால் அவர் உள்ளம் தெளிவடைந்தது. எதையும் தொலை நோக்குப் பார்வையில் காணும் மகாத்மாஜியின் உள்ளத்தில் தெளிவான கேள்விகள் உதித்தன. அவைகள் நிர்மாணத் திட்டங்களாக உருவாகின.

காலமே மதியினுக்கு ஓர் கருவியல்லவா?

அந்தக் காலம் ஆட்சியாளர்கள் மத்தியில் அலங்கோலங்கள் போட்டன. அதனால் அவர் போட்ட கோலங்களைக் கண்டு ரசிக்க முடியவில்லை.

பண்பட்ட நிலம் பயிர்த் தொழிலுக்கு ஏற்றதாவதைப் போல், ஆன்மீக குருவால் பண்பட்ட உள்ளத்திலே தெளிவான கேள்விகள் உருவாகும்.

வளர்ச்சி எப்பொழுதும் குறைதலை முடிவாகக் கொண்டது.

உயர்வு எப்பொழுதும் விழுதலை முடிவாகக் கொண்டது.

சேர்க்கை எப்பொழுதும் பிரிதலை முடிவாகக் கொண்டது.

அதுபோல் உள்ளத்தில் தோன்றும் தெளிவான கேள்வி, எப்பொழுதும் நற்சிந்தனையை முடிவாகக் கொண்டது.

நற்சிந்தனை, எப்பொழுதும் நல் தவத்தை முடிவாகக் கொண்டது.

எனவே இதுவரை அறிவு வளர்ச்சியின் முதற்படியான கேள்விகளைப் பற்றிச் சிந்தித்த நாம், இனி இரண்டாவது படியான தவத்தைப் பற்றிச் சிந்திப்போம்.

**6 (ஆ) தவம் :** *மனித நிலையினின்று தெய்வ நிலையை நாம் உணரும் அறிவின் பரிணாமமே ஆன்மீக வாழ்க்கையாகும். அதற்குச் சாதனை, வைராக்கியம் நிறைந்த அப்பியாசம் தேவை. அவைகளைப் பெறுவதற்கு எடுத்துக் கொள்ளும் முயற்சியே தவமாகும்.*

பலருக்கு மானுடத் தன்மை சுமத்தலரிய பாரமாயிருப்பதற்கும், மிருகத் தன்மையைத் தாங்குதலே எளிதாக அமைவதற்கும் காரணம், தன் இயல்புகளைத் தான் உணர இயலா நிலையேயாகும்.

உணரா நிலை ஏற்படுவது — அகந்தையில் தோன்றும் விருப்பு வெறுப்புகளால்; அகந்தை உண்டாவது — பிறவியிலிருந்தே உண்டாகும் வாசனைகளால்; அதாவது மன அமைப்பில் பதியும் உணர்வுகளால்; அந்த மன அமைப்பில் பதியும் உணர்வுகளைப் போக்கும் பயிற்சியே, தவமாகும்.

மனிதனுடைய புண்ய பாபங்கள் அவனுடைய காரி யங்களைச் சார்ந்திராமல் அவனுடைய மனநிலையைத் தான் சார்ந்துள்ளன.

அந்த மனநிலையைச் செம்மைப்படுத்தும் வழிகளில் ஒன்று இறைவன் நாமங்களைச் செய்யும் தொழில்களுக் கிடையில் மௌனமாக ஓதிக் கொண்டிருப்பது. மகாத்மாஜி அவ்வழியைத்தான் மேற்கொண்டார்.

இறைவனை வணங்கி, அவனது ஆயிர நாமங்களி லுள்ள கல்யாண குணங்களில் ஈடுபடுவது; அந் நாமங்களை எப்பொழுதும் ஓதிக்கொண்டிருப்பதே தவமாகும் என்பார் பூதத்தாழ்வார்.

> ''ஏத்திப் பணிந்து அவன் பேர் ஈரைந்து நூறு
> எப்பொழுதும் சாற்றி உரைத்தல் தவம்.''

குற்றங்களைக் காணும்பொழுதே திருத்த முடியும். மனிதன் தன் இயல்புகளைத் தானே காணும் பொழுது, அவைகளிலுள்ள குற்றங்களைத் திருத்தி வாழமுடியும்.

இறைவனைக் காணாத மக்கள் தன்னியல்புகளைக் காணமாட்டார்கள் என்ற பொருளில், 'நின்னைக் காணா மாந்தர் தன்னையும் காணாத் தன்மையரே', என்கிறார் பட்டினத்தார்.

தன்னியல்புகளைக் கண்டு திருந்திய வாழ்க்கை வாழ் வதற்கு இறைவனை வழிபடுவதைத் தவிர வேறு வழி யில்லை என்பது தெளிவு.

'சமூக சீர்திருத்தம், மதத்தின் பாதுகாப்பு ஆகிய வற்றின் திறவுகோல்கள் மாணவர்களுடைய சட்டைப் பையில் இருக்கின்றன என்றே சொல்லலாம். சுயராஜ்ஜி

யத்தின் திறவுகோலும் அவர்களிடம்தான் இருக்கிறது', என்று கூறுவார் மகாத்மாஜி. (யங் இந்தியா 1-3-1928)

திறவு கோலாக மாணவர்கள் விளங்க, சுயக் கட்டுப் பாடுகளை வளர்க்கும் தவநெறிகள் கல்வித் திட்டத்தில் இடம் பெற வேண்டும்.

இடம் பெறாவிடில் திறவு கோல்களின் முனைகள் மழுங்கி விடும். அப்பொழுது குடியரசுநாடு என்பதன் பொருளைக் குடியர்கள் அரசு செய்யும் நாடு என்று பொருள் கொள்வார்கள். அரியணையில் அமர்ந்துள்ள அண்டங்காக்கைகளைக் கருடனாகக் கண்டு தொழுவார்கள்.

'மிருகங்களுடைய குணம் மனிதனிடம் எப்பொழுதும் இருக்கிறது', என்று மேல்நாட்டு அறிஞன் கூறுவான். (The blood of beasts is always present in man.)

அக்குணம் உண்டாவதற்குக் காரணம் — உடற்பற்றா லுண்டாகும் காமமும், அது தடைபட்டால் ஏற்படும் கோபமுமாகும்.

அந்த இரண்டையும் அடக்குவதே தவத்தின் வடிவ மாகும் என்பார் வள்ளுவர். (261)

தெளிவு நிலை, திரிபு நிலை, பகட்டு நிலை என்ற மூன்று நிலைகளில் அறிவு செயல்படும்.

தெளிவு நிலையில் அறிஞனாகவும், திரிபு நிலையில் பேதையாகவும், பகட்டு நிலையில் (செருக்கு நிலையில்) புல்லனாகவும் மாறிக் கொண்டிருப்பான். எவரிடத்திலும் இம்மூன்று நிலைகளும் இருந்து செயல்படும்.

எவ்வளவு எச்சரிக்கையாக இருந்த போதிலும் திரிபு நிலையும், பகட்டு நிலையும் நுழைந்து செய்யும் செயல் களில் குற்றங்களை ஏற்படுத்தி விடும்.

இறைவனின் நாமத்தை மனதில் ஓதிக் கொண்டிருப்பதன் நோக்கம் — அறிவு, தெளிவு, நிலையிலேயே செயல்பட வேண்டுமென்பதற்காகவேயாகும்.

'அகல்யா' என்ற நாமத்தின் பொருள் — குற்றமில்லாதவள் என்பதாகும்.

எவ்வளவோ எச்சரிக்கையாகக் கணவனைத் தவிர யாரையும் பார்க்க மாட்டாள். அப்படி இருந்தும் இந்திரன் வலையில் சிக்கி விட்டாள். அறிவில் பகட்டு நிலை செயல்பட்டு விட்டது. குற்றவாளியாகிக் கல் உருவானாள்.

ராம நாம தியானித்திலீடுபட்டு, ராமன்பாதம் பட்டு, பெண்ணுருவாகி மீண்டும் திருந்திய வாழ்வை மேற்கொண்டாள்.

தவ வாழ்க்கையிலீடுபட்டு வாழ்ந்தவன் தருமன். பகவான் கிருஷ்ணனைத் தியானித்த பின்பே எந்தக் காரியத்திலும் ஈடுபடுவான். அதனால் அவன் அறிவு தெளிவு நிலையில் செயல்படும்.

ஆனால் துரதிருஷ்டவசமாக சகுனியோடு சூதாடும் பொழுது ஸ்ரீ கிருஷ்ணனைத் தியானம் செய்வதற்கு மறந்து விட்டான். அதன் பயன் அவனது அறிவு — திரிபு நிலையிலும் பகட்டு நிலையிலும் செயல்பட ஆரம்பித்து விட்டது.

அதனால் ஏற்பட்ட பலன், எந்த நாட்டையும் அதன் மக்களையும் பாதுகாப்பேன் என்று பதவிப் பிரமாணம் எடுத்து ஆட்சியில் அமர்ந்தானோ அந்த நாட்டையே பணயம் வைத்து சூதாடி விட்டான்.

சிறிது நேரம் இறைவனை மறந்த தருமன் செயல் அதுவானால், இறைவனைக் கனவிலும் நினைக்காதவர்களுடைய ஆட்சி எந்நிலையிலிருக்கும்?

தேசம், சமுதாயம், சமூகம், தனி நபர் ஆகியோருக்கு சுய அர்ப்பண உணர்ச்சியுடன் சேவை செய்பவர்களைத் தேர்ந்தெடுத்துப் பதவிகளில் அமரச் செய்ய வேண்டும். அவர்கள் கர்மம் செய்பவர்களாவார்கள். அக் கர்மம் செய்வதற்குத் தவம் செய்பவர்களாக இருக்க வேண்டும். 'தவம் செய்வார் தம் கருமம் செய்வார்', என்பார் வள்ளுவர்.

'ஐந்து மணங்கு எடை அளவு புத்தக அறிவைக் காட்டிலும் ஐந்து தோலா அறிவை நடைமுறைக்குக் கொண்டு வருவதே சிறந்தது' என்பார் மகாத்மாஜி.

'மாணவன் என்ற வார்த்தைக்கு நமது மொழிகளில் 'பிரம்மச்சாரி' என்ற அழகான வார்த்தை ஒன்று இருக்கிறது. பிரம்மச்சாரி என்றால் கடவுளைத் தேடுபவன்; குறைந்த பட்ச காலத்தில் கடவுளுக்குச் சமீபமாகப் போகக் கூடிய விதத்தில் நடந்து கொள்ளுபவன் என்பது அதன் பொருளாகும்' என்பார் மகாத்மாஜி.

(யங் இந்தியா 8-12-1927)

நாம ஜெபம் மூலம் ஒருவன் கடவுளுக்குச் சமீபம் செல்ல முடியும். செல்லும் பொழுதே அறிவிலே தெளிவு ஏற்படும், கலைவாணி தம் கரத்தில் ஜபமாலையுடன் காட்சியளிப்பதைச் சிந்தித்தால், தவத்தின் பெருமையை உணர முடியும்.

'யார் நம் அறிவைத் தூண்டுகிறாரோ, அந்தச் சுடர் மயமான இறைவனின் உயர்ந்த ஒளியைத் தியானிப்போமாக', என்பது காயத்ரி மந்திரத்தின் பொருளாகும்.

'மந்திரங்களுள் நான் காயத்ரியாக இருக்கிறேன்', என்கிறான் கிருஷ்ணன்.

காயத்ரி மந்திரம் ஜெபித்து பாரதி கண்ட 'அறிவே தெய்வம்' என்ற வாக்கைக் கடைப் பிடித்து வாழப் பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்வோமாக !

சுமை தூக்காத காளை, கறவாத பசு, மலடியான மனைவி, மக்களைக் காப்பற்ற இயலாத அரசு இருந்தும் பயனில்லை.

அது போல் பற்றற்ற உள்ளத்தை உருவாக்கும் தவ நிலையில்லாத வாழ்வும் பயனில்லை. அவ் வாழ்வே உயிரினங்களிடம் அன்பு செலுத்தும் இயல்பான வாழ்வை உருவாக்கும்.

இதுவரை அறிவு வளர்ச்சியில் இரண்டாவதுபடியான தவத்தினுடைய இன்றியமையாமையை உணர்ந்த நாம், மூன்றாவது படியான அன்பைப் பற்றிச் சிந்திப்போமாக !

6 (இ) **அன்பு :** உயிர்களிடத்தில் அன்பு வேண்டும். அன்பு கொள்வது மட்டுமல்ல, அந்த உயிர்களிடத்திலே தெய்வம் இருப்பது உண்மை என்ற நம்பிக்கையும் வேண்டும். தெய்வம் என்று ஒன்று இருக்கிறதா? இல்லையா? என்ற சந்தேகமே குழந்தைகளுக்கு வரக் கூடாது. 'நம்பினார் கெடுவதில்லை', என்பது வேத வாக்கு.

அந்த நம்பிக்கை பள்ளிகளிலே வளர்க்க வேண்டும். செம்மையான வாழ்வுக்கு மூல காரணம் அன்பே. மற்ற உயிரினங்களின் மீது பிரதிபலன் எதிர்பாராது கொள்ளுகின்ற அன்புதான் உண்மையான அன்பு. அந்த அன்பு உள்ளத்தில் வைராக்கியத்தை உண்டாக்கும்.

"உயிர்களிடத்தில் அன்பு வேணும் — தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்
வயிரமுடைய நெஞ்சு வேணும் — இது
வாழும் முறைமையடி பாப்பா"

'பருவத்தே பயிர் செய்', என்பார்கள். பாரதியாரும் பக்தி நெறியைப் பருவம் பார்த்து விதைக்கிறார் குழந்தைகளின் உள்ளத்தில். பக்தியின் மீது அவர் கொண்டுள்ள எண்ணங்களும், பக்தியில் அவருக்கு இருந்த ஈடுபாட்டையும், கீதையில் அவருக்குள்ள நம்பிக்கையும் உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்குகின்றதல்லவா?

'அன்பு கனிந்த உள்ளத்துடன் உன்னை நீயே தூய்மையாக்கி கொள்ளவேண்டும். நாளடைவில் நீ பரம்பொருளைக் காண்பாய்' என்கிறான் கீதாசார்யன். (4.38)

'எலும்பாலான உடல் தளர்ந்து மனமுருகி எழுந்ததான ஒப்பற்ற அன்புள்ளங்கொண்டவர்களைத் தவிர, சக்கரத்தைத் தரித்து நிற்பவனை வேறு யார் காணவல்லார்கள்?' என்ற ஓர் வினாக்குறி எழுப்புவார் திருமழிசை ஆழ்வார்.

"என்பிலெள்கி நெஞ்சுருகி யுள்கனிந் தெழுந்ததோர்,
அன்பிலன்றி யாழியானை யாவர் காண வல்லரே.?"

'அன்புள்ளங் கொண்ட யான் தவிர வேறொருவரும் உன்னை அறிய மாட்டார்கள். எனது அறிவிற்குப் பரமபதமோ, விண்ணவர்களோ, எல்லோரும் கூடினாலும் ஈடு செய்ய முடியாது என்று தன் அறிவைப் பற்றிப் பெருமிதமாகக் கூறுவார் திருமழிசையாழ்வார்.

"............ உன்னைப் பிறர் அறியார் என் மதிக்கு
விண்ணெல்லாம் உண்டோ விலை?"

அவர் வாக்கின் மூலம் அறிவு வளர்ச்சியில் அன்பின் பங்கு மிகவும் இன்றியமையாதது என்பதை உணரலாம்.

கலைவாணியின் உறைவிடம் எங்கேயுள்ளதென்றால் செழுமையான கருணை உள்ளங்கொண்ட அறிவாளர்களின் உள்ளமே என்கிறார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

''செழுங் கருணை ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சம்,
உவந்து
நடனமாடிக் களிக்கும் மயிலே, உன் பாதம் அடைக்
கலமே.''

நாமே எல்லாம் என்ற நினைவை விட்டு விட்டு, நமக்கு வெளியேயும் உலகம் இருக்கிறது; அது நம்முடைய உலகம் தான்; அதன் நல் வாழ்வில் நமது வாழ்வும் அடங்கி யிருக்கிறது என்று சிந்தித்து உணரும்பொழுது தோன்றும் உணர்வு, அன்பாகும்.

புகழுக்கும் முகஸ்துதிக்கும் பழக்கப்பட்டவர்களிடம் உண்மை அன்பு தோன்றாது. ஆத்ம சக்தியிலிருந்து தான் அது தோன்றும்.

தன்னை நடுநாயகமாகக் கொண்ட செயற்பாடு (அகங் காரம்) எங்கு இல்லையோ, அங்கு தான் உண்மை அன்பு தோன்றும்.

அன்றிற் பறவைகள் எப்போதும் உடற்பிணைப்புற்றி ருப்பது போல், நல்ல கேள்வி உதயமாகி, நற்சிந்தனை என்ற அடித்தளத்தில் நல் தவவாழ்வை மேற்கொண்டு, எப்போதும் நல் அறிவுப் பிணைப்புண்டாகி வாழும் வாழ்க் கையே அன்பு வாழ்க்கையாகும்.

'நண்பா!' என்று துரோணர் கூறிய சொல்லைத் துருபத அரசனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இளமையில், கூடப் படித்த நண்பர் என்று கூட எண்ணிப் பார்க்க முடியவில்லை. அவன் வாழ்க்கை தடம் புரண்டு விட்டது.

அதற்குக் காரணம் — பதவி, செல்வம் என்ற சக்கரங்கள் அவனது வாழ்க்கை வண்டியில் பூட்டப்பட்டதே யாகும். அன்பு, அறிவு ஆகிய சக்கரங்கள் பூட்டப்பட்டிருந்தால் தடம் புரண்டிருக்காது.

'பிற உயிரினங்களுக்கு மதிப்பளித்து அன்பு செலுத்தி வாழாத பக்தர்கள், ஆலயத்தில் ஆண்டவனின் உருவத்தைப் பயனின்றி வழிபடுவோர்களே' என்று கூறுவார் மகா பக்தரும் ஞானியுமான ஜீவகோஸ்வாமி அவர்கள்.

பாறைக்குள்ளிருக்கும் தேரையானது வானத்துச் சந்திரனைப் பார்க்க முடியுமா? முடியாது.

அதுபோல் இன்றைய அரசியல்வாதிகளில் பெரும் பாலோர் சுயநலம், ஆசை, அச்சம் என்னும் குணங்கள் செறிந்த 'உலகமாயை' என்னும் பாறைக்குள்ளிருப் பவர்கள்.

இவர்களால் நடையில் நின்று உயர் நாயகனாக வாழ்ந்து, இழிபடு போர், கொலை, தண்டம் பின்னியே கிடக்கும் அரசியலிலும் பகைவனுக்கு அருளும் அன்பு உள்ளங் கொண்டு வாழ்ந்த அரசியல் ஞானி மகாத்மாஜியைப் பார்க்க முடியுமா? முடியாது.

அதற்குக் காரணம் இவர்கள் பல பிறவிகளில் செய்த கர்ம பலன்களாலுண்டான தொகுப்பான பாபங்களே யாகும்.

அவைகள் இவர்கள் உள்ளத்தில் பதிந்துள்ள தவறான சிந்தனைக் கால்வாய்களாகும்.

பதவி மயக்கத்தில் மூழ்கிய இவர்களுடைய அகந்தை யானது உண்மை நிலையை அறிந்து கொள்ளாமல் உடலு டனும் புலன்களுடனும் தன்னை ஒன்றுபடுத்திக் கொண் டது. அதனால் பாபங்கள் வந்தடைகின்றன.

கல்யாணமாகாமல் தடுப்பது ஒரு பாபம். கல்யாண மானாலும் கணவனுக்கும் மனைவிக்கும் வேற்றுமைகளை யுண்டாக்கிக் கூடமுடியாமல் தடுப்பதும் ஒரு பாபம். அப்படியே கூடி வாழ்ந்த காலத்திலும் பிள்ளை உண்டா காதபடித் தடுப்பதும் ஒரு பாபம்.

அதுபோல் ஆன்ம குருவிடம் விசுவாசமுண்டாகி அவரை அடைய முடியாமல் தடுப்பது ஒரு பாபம். அடைந்த காலத்திலும் ஆத்ம தத்துவ ஞானம் உண்டாகாத படி தடுப்பதும் ஒரு பாபம். அப்படியே ஆத்ம தத்துவ ஞானம் ஏற்பட்ட காலத்தும் அதனை வாழ்க்கையில் கடைப்பிடித்து, எல்லா உயிரினங்களிடமும் அன்பு செலுத்தி அவைகளுக்கு இயன்றளவு சேவை செய்ய முடியாமல் தடுப்பதும் ஒரு பாபமே.

இறைவழிபாட்டின் மூலம் பாபங்களைப் போக்க முடியும்.

அடிக்கடிப் பயன்படுத்தாத கருவிகள் தூளேறித் துருப் பிடித்து, நிறங்கெட்டுப் பார்ப்பதற்கு வெறுப்புண்டாகிறது.

அது போல் மானுட அறிவும் அடிக்கடி சேவை மூலம் சமுதாய நன்மைகளுக்குப் பயன்படுத்தாவிட்டால், அகங் காரம், தாழ்வு மனப்பான்மை போன்ற தூள்களேறித் துருப்

பிடித்து முகத்தில் பொலிவிழந்து, நிறங்கெட்டுப் பார்ப் பதற்கு வெறுப்பான தோற்றத்தை உண்டாக்கிவிடும்.

அப்படிப்பட்ட தோற்றம் ஏற்படாமலிருக்க இறைவன் குடிகொண்டு உள்ள உயிரினங்களிடம் தூய்மையான அன்பு செலுத்திச் சேவை செய்ய வேண்டும்.

'நியாயமான காரியத்திற்காகப் போராட வேண்டும். ஆனால் அந்தப் போராட்டத்தில் வன்முறை இருக்கக் கூடாது; அந்தப் போர் முறைக்கு 'அறப் போர்' என்று பெயர் வைத்துப் பல சந்தர்ப்பங்களில் அப்போரைத் தாமே நடத்திக் காட்டி வெற்றியும் பெற்றார் மகாத்மாஜி.

இன்றைய கல்வித் திட்டத்தில் பயிலும் மாணவர் களில் சிலர் மறப்போரில் ஈடுபட்டு அரசுடைமைப் பொருள் களை அழிக்கிறார்களென்றால் அவர்கள் அறிவு வளர்ச்சியில் 'அன்புணர்வு' விவேகம் போதிய அளவு பங்கேற்கவில்லை என்பதுதான் பொருள். அன்புணர்விலுள்ள ஆத்ம சக்தி யினை அவர்களால் உணர இயலவில்லை என்பது தான் பொருள்,

'என்னுடைய மதம் சிறைச்சாலை போல மற்றவர் களை வெளியே ஒதுக்கும் மதமல்ல. அதன் வாசல் எப் போதும் திறந்திருக்கும். கடவுள் படைப்பிலே மிகத் தாழ்ந்த உயிருக்கும் அங்கே இடமுண்டு.

ஆனால் இறுமாப்பு; சாதித் திமிர்; நிறத் திமிர்; மத விரோதம் ஆகியவற்றிற்கு ஆங்கே இடமில்லை' என்றார் மகாத்மாஜி.

இன்று அண்ணலின் கருத்திற்கு நேர் எதிரிடையில் அறிவாளிகள் கூடச் செயல்படுகிறார்களென்றால், அவர் கள் அறிவு வளர்ச்சியில் மக்கட்பண்புகளில் தலையான

பண்பான அன்புணர்வு போதிய முறையில் பங்கேற்கவில்லை என்பதுதான் பொருள்.

பிற உயிரினங்களின் மீது அன்பு செலுத்தி வாழாத வர்கள் உயிர் நின்ற உடம்பைப் பெறாதவர்கள்; அந்த உடம்பு ஏதோ எலும்பினையும் தோலையும் போர்த்த வெற்றுடம்பே என்பது வள்ளுவர் கருத்து.

குழந்தைப் பருவத்திலிருந்தே மற்ற உயிரினங்களிடம் அன்பு செலுத்தி பேதம் பாராட்டாமல் வாழப் பழகும் பொழுது அந்த அன்பு பேரன்பாகிப் பராபக்தியாகக் காலப் போக்கில் மாறுகிறது என்பதை உணர்ந்த பாரதியார், குழந்தைகளைக் கோழி, காக்கை, ஆடு போன்ற உயிரினங் களிடம் கூடிப் பழகுமாறு கூறுகிறார்.

குப்பையைக் கிளறித் தனக்கு வேண்டிய உணவை மட்டும் எடுத்துக்கொள்ளும் கோழியிடம் குழந்தைப் பரு வத்திலிருந்தே அன்பு செலுத்தி வாழ்ந்தால், நாளடைவில் நல்ல சாத்திரங்களைப் பயின்று அவைகளிலுள்ள சாரத்தை மட்டும் கிரகித்துக்கொள்ளும் நல் அறிஞர்களிடம் அன்பு செழுத்தி வாழும் பழக்கம் ஏற்பட்டுவிடும்.

திருடுகின்ற சுபாவத்தையும், உழைத்துப் பிழைக்காமல் எத்திப் பிழைக்கும் சுபாவத்தையுமுடைய காக்கையிடம் அன்பு செழுத்தி வாழ்ந்தால், நாளடைவில் திருடியும் ஏமாற்றியும் வாழ்பவர்களிடமும் அன்பு செலுத்தி வாழும் பழக்கம் ஏற்பட்டுவிடும். அவர்களும் திருந்திய வாழ்வை மேற்கொள்வார்கள்.

கிடைத்த உணவை தன் இனத்துக்குப் பகிர்ந்தளிக்கும் காக்கையின் குணம், குழந்தைகளுக்கும் ஏற்பட்டுவிடும்.

தன் இச்சையாகத் திரியத் தெரியாமல், மனிதனை அண்டி வாழும் ஆட்டினிடம் அன்பு செலுத்துவதன் மூலம், நாட்டில் கதியற்ற நிலையில் பிறரை அண்டிப் பிழைக்கும் ஏழைகளிடமும் குழந்தைப் பருவத்திலிருந்தே அன்பு காட்டும் பழக்கம் வளர்ந்துவிடும் என்பதற்காகக் கோழி, காக்கை, ஆடு போன்ற உயிரினங்களுடன் பழகுமாறு கூறுகிறார் பாரதியார்.

''கொத்தித் திரியு மந்தக் கோழி — அதைக்
கூட்டி விளையாடு பாப்பா!
எத்தித் திருடு மந்தக் காக்கை — அதற்கு
இரக்கப் படவேணும் பாப்பா!
... ... ... ... ... ... ... ... ... ... ...
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு — இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா !

எத்தித் திருடும் அந்தக் காக்கைக்கு இரக்கப் படச் சொன்னார் பாரதியார். ஆனால் திருமங்கையாழ்வாரோ இறைவனை அழைப்பதற்குக் காக்கையைத் தூது விடுகிறார்.

''கரையாய் காக்கைப் பிள்ளாய்
கருமா முகில் போல் நிறத்தன்
உரையார் தொல்புக ழுத்தமனை வரக்
கரையாய் காக்கைப் பிள்ளாய் !''

காக்கையிடம் எத்தித் திரியும் கெட்ட குணமும், பகிர்ந்து உண்ணும் நல்ல குணமும் இருக்கிறது.

அதே போல் மனிதனிடமும் இருக்கிறது. 'கறுப்பு நூலும் வெள்ளை நூலும் கலந்த ஆடையே மனிதன்', என்பார் வியாசர்.

கை காட்டி மரத்தைப் பார்த்து ரசித்துக் கொண்டே யிருந்தால் அது சேர வேண்டிய இடத்திற்குக் கொண்டு சேர்க்குமா?

எல்லா உயிரினங்களிலும் இறைவன் இருக்கிறான் என்று சொல்லிக் கொண்டிருந்தால் மட்டும் போதுமா?

அதனைக் கடைப்பிடித்து எல்லா உயிர்களிடமும் அன்பு செலுத்தவேண்டும். எலும்புத்துண்டு வாயில் சிக்கி வலி பொறுக்க முடியாமல் ஓடிய நாயினிடம் அன்பு செலுத்தி, அதனைப் பிடுங்குவதற்காக அதன் பின்னால் ஓடினார் நாமதேவர் என்ற பக்தப் பெருமானார்.

அன்பு இதயம் இல்லாதவர்கள் நீதியாக இருக்க முடியாது.

தீயவர்கள் பிறரைத் துன்புறுத்துவதிலே பலம் காட்டுவார்கள். அரசர்கள் குற்றங்களைத் தண்டிப்பதிலே பலம் காட்டுவார்கள். மாதர்கள் தங்கள் கணவர்களுக்குப் பணி விடைகள் செய்வதிலே பலம் காட்டுவார்கள். நல்ல குண சாலிகள் தங்களுக்குத் தீங்கிழைப்பவர்களைத் தண்டிக் காமல் அவர்களிடம் பொறுமை காட்டுவதிலே பலம் காட்டுவார்கள்.

அந்தப் 'பொறுமை என்ற குணப்பயிர்' சாகுபடி செய்யும் நிலம் — அன்பு உள்ளமே.

கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த கோவிந்தன், கோக்களை மட்டும் காப்பாற்றவில்லை; அகங்காரம் ஆக்ர மித்துக் கொண்ட இந்திரனது உள்ளத்தையும் காப்பாற்றி னான். தன் மீது அன்பு உண்டாகும்படிச் செய்து, தனக் குக் கோவிந்தப் பட்டாபிஷேகமும் நடத்தி வைக்கும் படிச் செய்தான்.

கோவிந்தனின் பொறுமை குணத்தை, 'குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றி' என்று கொண்டாடுகிறாள் ஆண்டாள்.

அன்பை நம்மிடத்துத் தந்து, அன்பை நம் உள்ளத்தினுள்ளே பெருக்கி, அதன் மூலம் இறைவன் நம்மிடம் தொடர்பு கொண்டு நம்மைக் காத்தருள்கிறானென்று கூறுவார் தாயுமான சுவாமிகள்.

''அன்பைப் பெருக்கி என தாருயிரைக் காக்க வந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே.''

சுயநலமற்ற அன்பு எதுவுமே பரத்தை நோக்கி நம்மை அழைத்துச் செல்லும். இயேசுவும், ''மற்ற உயிர்களுக்காக நீங்கள் இரக்கங்கொள்ளுங்கள். அப்போது இறைவனிடம் சீக்கிரம் சென்று சேர்வீர்கள்'' என்று கூறுகிறார்.

அன்பு நெறியில் சென்று மகாத்மாஜி நம் நாட்டிற்கு சுதந்திரம் வாங்கித் தந்ததை மறந்துவிடக் கூடாது. அன்பு அணுசக்தியை விடப் பன்மடங்கு பலம் வாய்ந்தது.

பிரேமை அன்பே பக்தியாகும். அன்பு அதிகரிக்க அதிகரிக்க ஆணவம் குறையும். ஏற்றத் தாழ்வுகளைச் சரி செய்யும் சிறந்த கருவி அன்பே. மக்களால் மக்கள் பணிபுரிவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பேரவைகளில் கூடும் பொழுது அந்தச் சிறந்த கருவியை இதயப் பையிலே போட்டுக் கொண்டு செல்லாவிட்டால், பேரவைகள் மல்யுத்த மேடைகளாகிவிடும். தெருமுனைக் குழாய்களாகி விடும்.

அன்பினால் எவ்வளவு பெரிய எதிரியையும் வென்று விட முடியும். பக்திக்கு இணையான, அன்புக்கு இணை

யான சக்தியே இவ்வுலகில் இல்லை. அந்த அன்பின் மூலம் உதயமாகும் ஆத்ம சக்தியைக் கொண்டு தருமத்தை உணர முடியும்.

துடுப்பைக் கொண்டு படகைக் கடலில் செலுத்தி கரையை அடைகிறார்கள்.

'அன்பு' எனும் துடுப்பைக் கொண்டு, 'வாழ்க்கை எனும் படகை', பிறவி என்ற பெருங்கடலில் செலுத்தி, இறைவனின் திருவடிகள் என்ற கரையை அடைய முயல்வோம்.

இதுவரை அறிவு வளர்ச்சியில் மூன்றாவது படியான அன்பைப் பற்றிச் சிந்தித்த நாம், நான்காவது படியான தர்மத்தைப் பற்றிச் சிந்திப்போம்.

6 (ஈ) **தர்மம்:** அடித்தளத்திலுள்ள சிறிய ஓட்டை கப்பலையே கவிழ்த்து விடும். அதுபோல் மனதிலுள்ள சிறிய பய உணர்வு, கொண்ட குறிக்கோளையே தகர்த்துவிடும். எனவே பயத்தைப் போக்க தர்மத்தை உணர்வது இன்றியமையாததாகும்.

வாழ்நாளில் வரப்போகும் இன்பத்தையோ, நலத்தையோ, புகழையோ சிறிதேனும் எதிர்பாராமல் தாம் செய்யும் தொழிலைக் கடமையாகக் கருதிச் செய்ய வேண்டுமானால் அச்சத்தை அகற்ற வேண்டும்.

அகற்றுவதற்குக் கொஞ்சமாவது தர்மத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்கிறான் கீதாசார்யன்.

'தர்மத்தைச் சிறிதளவு கடைப்பிடித்து வாழ்ந்தாலும் அது பெரிய சம்சார பயத்திலின்று காக்கும்' என்று கீதை கூறும். (2.40)

நவகாளியில் படுகொலைகள் நடந்து கொண்டிருக்கும் பொழுது மகாத்மாஜி அங்கு சென்றார். அவர் உள்ளத்தில் அச்சமென்பது இம்மியளவுமில்லை. தர்மத்தின் வடிவமான ராம்பிரானின் நாமத்தைச் ஜபித்து அதன் மூலம் தர்மத்தை உணர்ந்தமையே அதற்குக் காரணமாகும்.

நீரில் மூழ்கிய மனிதன் ஆடைக்காகப் பரிதாபப்பட்டு அலைவது பொருளற்றது. முதலில் நீரிலிருந்து வெளியேற முயற்சிக்க வேண்டும்.

அறியாமைக் கடலில் மூழ்கிய மனிதன், புலனின்பங்களை அனுபவிக்க உதவும் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பரிதாபப்பட்டு அலைவது பொருளற்றது. முதலில் புலன்களைக் கட்டுப்படுத்தி அறிவின் தளத்திற்கு உயரும் வழிகளைத் தேடவேண்டும்.

அதற்கு ஆன்மவொளிக் கடலில் மூழ்கித் திளைக்க வேண்டும். அப்பொழுது அச்சம் அகலும். நோய், முதுமை, மரணம் இவற்றை எதிர்த்து மனம் உறுதியாக இயங்கும். நிலைத்த மதியில் செயல்பட்டுச் செய்யும் தொழிலைச் சிறப்பாகச் செய்து பலனடையும். பொருளாதார முன்னேற்றம் தானாகவே ஏற்படும்.

'ஆன்மவொளிக் கடலில் மூழ்கித் திளைப்பவர்க்கு அச்சமுண்டோடா? — மனமே' என்று தம் மனத்திடம் கூறுகிறார் பாரதியார்.

பதவியின் மூலம் இன்பத்தின் உச்சநிலையில் ஆட்டம் போட்ட உலகின் அரசியல்வாதிகள் பலர், அப்பதவிக் காலம் முடிவடைந்தவுடன் கீழ்த்தரமான வாழ்வில் விழுகின்றனர். மூட்டப்படாமலே கொழுந்துவிட்டு எரியும் காட்டுத் தீயைப் போன்ற துயரங்களின் வரவழைத்து அலைகளால்

குழப்பமடைகின்றனர். கட்டுப்பாடான வாழ்வை மேற்கொள்ளாத நிலை அவைகளுக்குக் காரணமாகும்.

கவலையை நன்முறையில் நிவர்த்திசெய்ய விரும்பினால் இறைவனைப் புகலடைவதே தர்ம மார்க்கமாகும்.

''அர்ஜுனா! ஆரியனுக்கு அடாததும், சுவர்க்கத்தைத் தடுப்பதும், புகழைப் போக்குவதுமான இவ்வுள்ளச் சோர்வு இந்நெருக்கடியில் எங்கிருந்து உன்னை வந்தடைந்தது?'' என்று கிருஷ்ணன் அர்ஜுனனைக் கேட்கிறார். (2.3)

இவ்வாறு கேட்பதன் மூலமாக அப்போது அர்ஜுனன் பேதமையுற்று, மனங்கலங்கிய நிலையில் இருந்தான் என்பது விளங்குகிறது அல்லவா?

கிருஷ்ணன் கேள்வி கேட்டு அர்ஜுனனுக்கு உடற்பற்றை நீக்கும் தவத்தின் சிறப்பைக் கூறி, ஆன்மாவிடம் அன்பு செலுத்தச் செய்து, அதன் மூலம் தருமத்தை உணரும்படி செய்தார்.

சுவாமி விவேகானந்தரும் மேற்கூறிய கீதா வாக்கினைக் கூறி பாரத மக்களிடம் விழிப்புணர்வையுண்டாக்கிப் புத்துயிரை அளித்தார்.

'இந்த ஆத்மா பலஹீனனால், கோழையினால், பலமற்றவனால், பயமே வடிவெடுத்தவனால் அடைய முடியாது' என்பது உபநிடத வாக்கு. (''ந அயம் ஆத்மா பலஹீனேன லப்யஹ''.)

பூமியிலிருந்து கிடைக்கும் குரூட் ஆயில் பல அசுத்தங்கள் கலந்தவை. சுத்திகரிப்பு நிலையத்தில் சில ரசாயனப் பொருள்களைச் சேர்த்து சுத்தி செய்து நல்ல பெட்ரோ

லாக மாற்றி நாட்டின் எல்லாப் பாகங்களுக்கும் அனுப்பப் படுகிறது.

அதுபோல் உலக இன்பங்களால் உண்டான மனதில் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் போன்ற பல அசுத்தங்கள் கலந்துள்ளன. அற நூல்களைப் படித்து ஆன் மீக குருவின் அருளைச் சேர்த்து மனதைச் சுத்தம் செய்து நல்ல எண்ணங்களாக, நல்ல நடத்தைகளாக, அன்பு மொழிகளாக, இரக்க குணங்களாக, பரோபகார சிந்தனை களாக மாற்றி உலகுக்கு வழங்குவது தர்மம் எனப்படும்.

தர்மத்தை யார் காப்பாற்றி வாழ்கிறார்களோ, அவர் களைத் தர்மம் காப்பாற்றிக் கைகொடுத்து உதவும். (தர்மோ ரக்ஷதி ரக்ஷித.)

தன் நன்மைக்காக இல்லாமல் பிறர் நன்மைக்காகச் செய்யப்படுவதும், ஈஸ்வர அர்ப்பணமாகச் செய்யப்படுவது மான கர்மம் தான், தர்மம் எனப்படும்.

காட்டிற்குப் புறப்பட்ட ராமபிரானுக்கு அவர் தாய் கோசலை கட்டிக் கொடுத்த கட்டுச் சோறு, தர்மம்.

தர்ம மார்க்கத்தில் நடந்த ராமபிரானுக்கு பட்சி இனங்களும் மிருக இனங்களும் உதவின. அதர்ம மார்க் கத்தில் சென்ற ராவணனுக்கோ அவன் தம்பி விபீஷணன் கூட உதவவில்லை.

நம் நாட்டு நாணயம் வெளிநாட்டில் செல்லாது. ஆனால் தர்மம் என்னும் நாணயம் எந்த நாட்டிலும் எந்த இடத்திலும் செல்லும். ஏனென்றால் எவ்விடத்தையும் ஆள்வது அந்த நாணயமே.

நாயின் வால் மறைக்க வேண்டுமிடத்தை மறைக்கிற தில்லை. ஈயையும் கொசுக்களையும் ஓட்டுகிறதில்லை.

அதுபோல் தர்மத்தைக் கடைப்பிடித்து வாழாதவர்கள் தங்களையும் காப்பாற்றிக் கொள்ளமாட்டார்கள். பிறரையும் காப்பாற்றமாட்டார்கள்.

தர்மத்தை நிலைநாட்டவும் பக்தர்களைக் காக்கவும், துஷ்டர்களை அழிக்கவும் இறைவன் அவதாரமெடுக்கிறான்.

திரௌபதியை, துஷ்டன் துச்சாதனனிடமிருந்தும், சாதுதுர்வாசரிடமிருந்தும் கிருஷ்ணன் காப்பாற்றினான்.

மனிதன் மேன்மை, பிரகாசம் அடைவது வேறு. உண்மையான தன்மையை உணர்வது வேறு. உணரும் பொழுது தர்மம் தெரியும்.

உணராத நிலையில், தான் குற்றவாளியாக இருந்து கொண்டு, தனக்கு அடங்கியிருப்பவர்களைக் குற்றங்கள் கூறிக் கோபம் வரும்படிச் செய்வான். சர்ப்பமுள்ள வீட்டில் வசிப்பவன் இரவில் தூங்க முடியாததைப் போல், இரவில் சுகமாகத் தூங்காமலிருப்பான்.

அவன் செயல் முயலின் செயலைப் போன்றது. தன்னை எதிரியிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளத் தெரியாத நிலையில் முயல் தன் கண்களை இறுக மூடிக் கொள்ளுமாம்; எதிரி போய் விட்டானென்று தானாக எண்ணிக்கொள்ளுமாம். அதிலே அதற்கு ஓர் திருப்தி.

மனிதன் தன் உண்மை நிலையறியும் பொழுது தெளிவான கேள்வியை எழுப்புவான். அது மனதிலுள்ள முரண்பாடுகளையும் தெளிவற்ற சிந்தனையையும் நீக்கிப் பற்றற்ற உள்ளம் உண்டாக்க தவத்திலீடுபடுத்தும்.

ஈடுபடும் பொழுது தன்னிலும் பிற உயிரினங்களிலு முள்ள ஆன்மாவை உணர்ந்து அவைகளுக்குச் சேவை செய்ய அன்புநெறியைக் கடைப்பிடிப்பான். அந்நெறிக்குத் தடையாகத் தோன்றும் ஆணவத்தை அகற்றித் தர்மத்தை உணர்வான்.

உண்மையிலேயே தர்மத்தை உணரும் பொழுது தர்மத்தின் வடிவமான இறைவனை உணர்வான்.

ஸ்ரீ ரெங்கநாதப் பெருமானை, 'அறம் சுவராகி நின்ற அரங்கன்' என்று அழைப்பார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

கடவுளைப் பாரதத் தாயின் வடிவிலே பார்த்தார் பாரதியார். நாட்டை நேசிப்பதின் மூலம் அதாவது நாட்டு மக்களிடமுள்ள சக்தியை நேசிப்பதின் மூலம் கடவுளையும் சக்தியாகவே கருதி, சக்தி வழிபாட்டில் ஈடுபட்டார் பாரதியார்.

நம்மால் எதுவும் நடக்கவில்லை என்ற சரணாகதி தத்துவத்தை வாழ்க்கையில் கடைப்பிடித்து, 'சக்தியருளா லுலகில் ஏறு' என்று கூறினார். சோதனைகளை மகிழ்வுடன் ஏற்றுப் பழகுவதே வாழ்க்கைப் பயிற்சியாகும். சக்தி சில சோதனைகள் செய்யத்தான் செய்வாள். அப்பொழுது மனங் கலங்காது மனத்தைத் தேற்ற வேண்டும் என்கிறார் பாரதியார்.

> ஓம், சக்தியருளாலுகில் ஏறு — ஒரு
> சங்கடம் வந்தாலிரண்டு கூறு ;
> சக்தி சில சோதனைகள் செய்தால் — அவள்
> தன்னருளென்றே மனதுதேறு.''

வெள்ளம் பெருகவும் வடியவும் மாறி மாறி வசதியளிக்கும் ஆற்றுப் படுகை போல, உடல், மன, அறிவு நிலைகளில நடக்கும் மாற்றங்களுக்குப் பொதுவான, மாறுதலற்ற உண்மையான ஆற்றுப்படுகையொன்று நமக்குள் இருக்கத் தான் வேண்டும் என்று தெளிவாகிறது.

நம்முடைய உடல், மனம், அறிவு பல்வேறு மாறுதல்களுக்குட்பட்டவை. ஆனால் மாறாத ஒன்று நம்முள் இருக்கிறது. அதுதான் நமது உண்மையான ஆன்ம சொரூபம். தரும நெறியில் வாழும் பொழுது அதனை உணர முடியும்.

உணரும் பொழுது மனம், பயஉணர்விலிருந்து விடுபடும்.

கும்பகர்ணனும் விபீஷணனும் ராவணன் சீதையைக் களவாடியது தவறுதான் என்றார்கள்.

விபீஷணன் அதர்மத்தின் கட்சியை விட்டுத் தர்மத்தின் கட்சியில் சேருகிறான். கும்பகர்ணனோ அதர்மத்தின் கட்சிக்காக தன் உயிரை விடுகிறான்.

கும்பகர்ணனைப் போலவே பாரதத்தில் பீஷ்மரும் கர்ணனும் செஞ்சோற்றுக் கடனுக்காகத் தங்கள் உயிரை விட்டார்கள்.

கும்பகர்ணன், விபீஷணன் இருவர் காட்டிய தருமங்களில் எது சிறந்தது? என்ற கேள்வியை எழுப்பினால், ஏற்படுவது குழப்பமே. அதனால்தான் மகாபாரதம் கூறுகிறது: ''தர்மத்தின் உண்மையான நிலை குகையில் அடைக்கப்பட்டிருக்கிறது. அதனைச் சாத்திரத்தினால் அறிய முடியாது. அறியாத ஒன்றை வாழ்க்கையில் கடைப்பிடிக்கவும் முடியாது. பெரியோர்கள், மகான்கள் சென்ற வழி

யில் செல்வதுதான் சிறந்த தர்மமாகும்.'' (தர்மஸ்ய தத்துவம் நிஹிதம் குஹாயாம், மஹா ஜநோ யேந கத: ஸ பந்தா.)

கிருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கர்மயோகத்தைப் பற்றிக் கூறும்போது 'மேலானவன் எதெதைச் செய்கிறானோ, அதனையே மற்ற ஜனங்கள் செய்கிறார்கள். அவன் எதனைப் பிரமாணமாகக் கொள்கிறானோ அதனை உலகம் அனுசரிக்கிறது', என்று கூறுகிறான்.

கீதாசார்யன் கூறியபடி கர்மயோகி மகாத்மாஜி எதனைப் பிரமாணமாகக் கொண்டு நமக்கு வாழ்ந்து காட்டினாரோ, அதனை அனுசரித்து வாழ வேண்டியது நமது கடமையாகும்.

அவர் காட்டிய நெறி உடல், உள்ள, ஆன்மா ஆகிய வற்றை ஒருங்கே வளர்க்கும் நெறி. அதுவே பூர்ண வாழ்க் கையை அளிக்கும் நெறி.

அவர், மனிதனுடைய தேவையையும் பேராசையையும் பிரித்துக்காட்டுகிறார்.

மனதில் ஒன்று கிடைக்கும் வரை ஏங்கவைத்து, கிடைத்தவுடன் அனுபவிக்கவைத்து, பின் இவ்வளவு தானா என்று எண்ணவைத்து, இதற்கு மேலும் கிடைக் குமா என்று நாட வைப்பது, பேராசை எனப்படும்.

''ஒவ்வொரு மனிதனின் தேவையைப் பூர்த்தி செய் வதற்குப் யோதிய ஆற்றல் நிலத்திடம் இருக்கிறது. ஆனால் ஒரு மனிதனுடைய பேராசையைப் பூர்த்தி செய் யும் ஆற்றல் நிலத்திடம் இல்லை'' என்பார் மகாத்மாஜி.

அவர் காட்டிய நெறிகளைக் கடைப்பிடிக்காமையால் இன்று ரசாயன உரங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள் நிலத்தின் செழிப்புத் தன்மையை மட்டும் கெடுக்கவில்லை. விஷம் நிறைந்த உணவுப் பொருட்களை உட்கொள்வதால், மானுட உடல் ஆரோக்கியத்தையும் கெடுத்து வருகிறது.

கிராமங்களில் நெய்யும் ஆடைகளை அணியாமல் விவசாயிகளுக்குப் பருத்திக்கு உரிய விலை கிடைக்காமல் செய்து விட்டு, புதிதாகக் கன்று போட்ட பசு பாலூட்டத் தவித்துப் பறப்பதுபோல பரபரத்துப் போய் நாகரீகம் என்ற பெயரில் வியர்வை உறிஞ்சும்தன்மையற்ற செயற்கை இழைத் துணியில் போய் விழும் நிலை ஏற் பட்டுள்ளது.

மனிதனின் பண்பாட்டுக் கேந்திரமான மனதை விருப்பு வெறுப்புக்களால் மாசுபடுத்தாமலிருப்பது தர்மமாகும்.

இலைகள், மலர்கள், காய்கள், கனிகள் வேர் இல்லாத மரத்தில் இருக்காது.

அது மாதிரி இன்பம், ஒற்றுமை, அன்பு முதலியன தர்மமில்லாத சமூகத்தில் இருக்காது.

இந்த உலகைத் தாங்குவது எதுவோ, இந்த உலகத் திற்கு அடைக்கலமாயிருப்பது எதுவோ, வீழ்ச்சியுற்றுக் கொண்டிருக்கும் மனிதனைத் தடுத்து நிறுத்தி அவனை உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லக் கூடிய சக்தி எது வோ, அதுவே தர்மமாகும்.

எதன் காரணமாக சாதாரண மனிதனும் சரி, சமூக மும் சரி, நாடும் சரி, ஒழுங்கு, கட்டுப்பாடு, நீதி, நேர்மை, நல்லொழுக்கம், நற்குணம், சுயநலமின்றி இருத்தல்,

கடமையைச் செய்தல் முதலிய நற்குணங்களைக் கடைப் பிடிக்கிறோமோ, அதுதான் தர்மம்.

கடலைப் போய் அடையும் நதிகளைப் போன்றவை மதங்கள். அவற்றிலுள்ள நீர் போன்றது தர்மம்.

மதஙகள் மாறுபடலாம். ஆனால் தர்மம் மாறுபடாது.

மனிதன் அடைய வேண்டிய பொருள்கள் நான்கு. அவை தர்மம், பொருள், இன்பம், வீடு. இதில் தர்மத் துக்குத்தான் முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. தர்மம் என்னும் முதல் படியில் ஏறித்தான் கடைசியில் மோட் சத்தை அடைய முடியும்.

பக்குவமற்ற பரிசோதனை அறிவால் மட்டுமே தர்மத் தின் நோக்கத்தை ஒருவனால் உணரமுடியாது. உண்மை யில் தர்மத்தின் நெறிகளை பகவான் மட்டுமே விதிக்க முடியும். (தர்மம் ஹி சாக்ஷாத் பகவத் ப்ரணீதம்.)

வாழ்வியலில் இரண்டு நோக்குகள் உண்டு. ஒன்று ஆன்மீக நோக்கு; மற்றொன்று அறிவியல் நோக்கு. உள் ளமும் உடலும் ஒருங்கே வளமுடன் வாழ இந்த இரண்டு நோக்கங்களும் இன்றியமையாதவைகள்.

'அறிவு அற்றம் (முடிவு வராமல்) காக்கும் கருவி' என்றும், உலகம் எவ்வாறு நடைபெறுகின்றதோ அத னோடு கூடத் தானும் அவ்விதத்தால் ஒழுகுவது அறிவு என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

இன்றைய மேற்கத்திய நாடுகளெல்லாம் அறிவியலில் அதி உன்னதமான முன்னேற்றமடைந்து பொருளாதாரத் தைப் பெருக்கிக்கொண்டது போல், நாமும் அறிவியலில் முன்னேறி வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொள்ள வேண்டும்.

அவர்களிடம் ஆன்மீக நோக்கு செயல்படாமையினால் அறிவியலில் தாங்கள் கண்டுபிடித்த அணு ஆயுதங்களை யெல்லாம் வரிந்து கட்டிக் கொண்டு வளைகுடாப் போரில் கொண்டுபோய்க் கொட்டியதையும் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இளமையிலிருந்தே ஆன்மீகப் பண்பு களை வளர்த்துக் கொண்டு தர்ம நெறியில் வாழவேண்டும்.

வர்ண ஓவியங்களுக்கு வளைகோடுகளும் வர்ணங்களும் இன்றியமையாததைப்போல், நல்ல பாட்டிற்குத் தாளமும் இராகமும் இன்றியமையாததைப் போல், கல்வியாளர் களுக்கு அன்பு, தருமம் ஆகிய இரு படிகள் மிகவும் இன்றி யமையாதவையாகும்.

ஆன்மீக நெறியில் ஈடுபடும்பொழுது அந்த இரண்டு படிகளின் வலிமையினை உணர முடியும். அமர்ந்திருக்கும் பதவிக்கேற்பப் பொருந்தியவராகச் செயல்பட முடியும்.

அரத்தைப் போன்று கூர்மையான அறிவைப் பெற்றா லும் மக்கட் பண்புகளுக்கு அடிப்படையாக அமையும் அன்பு, தருமம் ஆகிய படிகளில் வளராத அறிவு சிறப்பினை எய்ய முடியாது.

ஆன்மீகமும் அறிவியலும் ஒன்றுக்கொன்று உடன்பா டானவைகள்; வெவ்வேறு மார்க்கங்கள் அல்ல என்பதைத் தம் வாழ்நாளில் வாழ்ந்துகாட்டிப் போதனைகள் செய்த வர் மகாத்மாஜி.

அவர் தம் அன்றாட வாழ்க்கையிலும் அரசியலிலும் பிரார்த்தனையின் வலிமையை உணர்ந்து அனுபவித்தார்.

அறிவியல் ஓர் சொகுசான வாகனமாகவும் அதில் அமர்ந்து ஓட்டும் ஓட்டுனர் ஓர் ஆன்மீகவாதியுமாக இருந்

தால், அது செல்லும் பாதை கரடு முரடான பாதையாக இருக்காது.

'உண்மை வைஷ்ணவனின் உடலில் சகல தீர்த்தங்களும் வசிக்கின்றன' என்று பாடினார் நரஸி மேதா. (''ஓயாமல் ராமனை உள்ளம் நினைந்திட உண்டு புண்ணிய புனலுட னதிலே''.)

தன் உடலே தீர்த்தமாகி உலகுக்கு நிர்மாணத்திட்டங் களை உருவாக்கியவர் மகாத்மாஜி. அதில் குளிரக் குடைந்து நீராடினால் உடல் அழுக்கும் போகும்; மன அழுக்கும் போகும்.

அப்படி அழுக்கை நீக்கிப் புனிதப்படுத்திக்கொள்ளா விட்டால் நாக ஸர்ப்பங்கள் வாழும் மரப்பொந்தினைப் பாதுகாப்பாகக் கொண்டவர்களாவார்கள்.

காதலி ஒருத்தியைக் கைப்பிடித்து அவள் காரியம் யாவி லும் கை கொடுத்துக் கடமைகளையும் கர்மங்களையும் செய்வதே ஆறு பகை எனப்படும் காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்சர்யங்களை வெல்ல வசதியாக ஏற்பட்ட கோட்டையாகும்.

அந்தக் கோட்டையின் சுவர்கள் தருமங்களால் கட்டப் பட்ட சுவர்களாகும். அங்கு வாழும் தம்பதிகள் இயல் போடு இல் வாழ்க்கை வாழ்வர்; இறைவனை அடைய முன்னணியில் நிற்பவர்களுள் முதன்மையாக நிற்பர். இறைவன் அவர்களின் இதயங்களில் குடிகொண்டுள்ளார்.

'உயிர்களிடத்து தர்மத்துக்கு முரண்படாத காமமாக இருக்கிறேன்', என்கிறான் பகவான் கிருஷ்ணன். (7.11)

தர்மத்துக்கு முரண்பட்ட காம உணர்வு உடையவர் நல்ல குருவாகத் திகழ முடியாது. அவருடைய போதனைகள் கேட்பவர்களின் உள்ளங்களில் பதியாது.

''நான் கஸ்தூரிபாயிடம் கொண்டிருந்த அன்பு, காமக் கலப்பே இல்லாததாக இருந்திருக்குமாயின், இன்று அவள் சிறந்த படிப்பாளியாகி இருப்பாள். ஏனென்றால், படிப்பதில் அவளுக்கு இருந்த வெறுப்பையும் அப்பொழுது நான் போக்கியிருக்க முடியும். பரிசுத்தமான அன்பினால் ஆகாதது எதுவுமே இல்லை என்பதை நான் அறிவேன்'', என்கிறார் மகாத்மாஜி. (சத்திய சோதனை; முதல்பாகம்; 4. கணவன் அதிகாரம்)

கஸ்தூரிபாயிக்குப் படிப்பதில் வெறுப்புண்டாவதற்குக் காரணம் அவளுடைய அறியாமையல்ல; தன்னுடைய போதனையில் காமக்கலப்பு ஏற்பட்டதே என்று கூறும் மகாத்மாஜியின் கருத்து, வாழ்வில் நல்ல குருவாகத் திகழ வேண்டும் என்பவர்களுக்கு ஓர் சிந்தனை விருந்து.

அறிவை நாடி மனிதன் புத்தகங்களைப் படிக்கிறான். ஆனால் புத்தகங்களை மட்டும் படித்து அறிவினைப் பெற்றுவிட முடியாது.

அவரவர் மனமே எல்லையற்ற அறிவினை அடக்கிய புத்தகம் ஆகும்.

உடலிலுள்ள சக்திகளில் உயர்ந்தது ஓஜஸ் சக்தி என்று கூறுகிறார்கள் யோகிகள். ''ஓஜோஸி ஓஜோ மயி தேஹி'', என்பது உபநிடத வாக்கியம்.

இந்த சக்தி மூலாதாரத்திலிருந்து மூளைக்குச் சென்று மூளையில் சேகரித்து வைக்கப்படுகிறது.

ஒரு மனிதனின் மூளையில் எவ்வளவுக்கெவ்வளவு அதிக மாக ஓஜஸ் சக்தி இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் ஆற்றலுடையவனாகவும், அறிவிலே தெளிவுடையவனாக வும், ஆன்மீக ஞானம் பெற்றவனாகவும் இருப்பான். பகை வரிடம் பொறுமை, தாழ்ந்தோரிடம் கருணை, சமமான வரிடம் நட்பு, மொத்தத்தில் அனைத்துயிரிடத்தும் அன்பு காட்டுபவனாக இருப்பான்.

ஓஜஸ் சக்தி அதிகமுடையவரே நல்ல குருவாகத் திகழ்வார். அவ்ர் சொல்வதோடு நிறுத்தாமல் பிறருக்கு நன்கு விளக்கம் கொடுத்துத் தானும் ஆக்கமுறச் செயல் படுவார். தர்மத்தை நன்கு உணர்வார்.

புற உலகில் மின்சக்தியாக, காந்த சக்தியாக, புவி ஈர்ப்பு சக்தியாகச் செயல்படுகின்ற சகதி, மானுட உட லில் ஓஜஸாகச் செயல்படுகிறது. அது தவத்தின மூலம் கிடைக்கும் அளப்பறிய ஓர் சக்தியாம்.

கற்பு நெறியில் தவறாத ஆடவரும், பெண்டிருமே ஓஜஸைச் சேமித்து வைக்கும் வல்லமை பெற்றவர்களாவர்.

ஒரு வகை ஆன்மீக வலிமையே ஓஜஸ் எனப்படும்.

மிருகங்களுக்கோ, பண்பாடில்லாத மனிதர்களுக்கோ இந்த ஆன்ம ஒளி வாய்ப்பதில்லை.

முதுகெலும்புள்ள அனைத்து உயிரினங்கட்கும் இடை, பிங்கலை, சுழுமுனை என்று மூன்று நாடிகள் அமைந்துள் ளன. ஆனால் மிருகங்களுக்கு சுழுமுனை திறக்கப்பட்டிருக் காது.

மனிதர்களுள் யோகிகளுக்கு மட்டுமே சுழுமுனை திறக் கப்பட்டிருக்கிறது.

சுழுமுனை நாடி திறக்கப்பட்டு அது மேலாக எழு மாயின் நாம் புலன்களுக்கு அப்பால் செல்லுவோம். நியாய வாதங்களாலோ, நூலறிவாலோ அவ்விடத்திற்குச் செல்ல முடியாது.

பொறி, புலன் உணர்வுகளைக் கடந்து அப்பால் நிற்கும் புத்திக்கு எட்டாததாய் மனம் செல்லும். எனவே சுழு முனை நாடி திறக்கப்படும்பொழுது மனத்தின் சக்தியா னது புத்தியின் சக்தியைவிட ஓங்கியிருக்கிறது. அந்த மன மானது எல்லையற்ற அறிவினை அடக்கிய புத்தகமாகிறது. படிக்காத மேதைகள் உருவாவதற்கு அதுவே காரணமாகும்.

ஆகையினால்தான் கீதையை அறிவைக்கொண்டு படிக்க முடியாது. இதயத்தைக் கொண்டு படிக்கவேண்டுமென் கிறார் மகாத்மாஜி.

சுழுமுனை மார்க்கத்தில் தாமரைகள் என்று அழைக் கப்படும் சக்கரங்கள் அமைந்துள்ளன. முள்ளந் தண்டுக் கொடியின் அடியில் அமைந்திருப்பது மூலாதாரம்; அதனை அடுத்து மேலே இருப்பது சுவாதிஷ்டானம். மூன்றாவது மணிபூரகம்; நான்காவது அனாகதம்; ஐந்தாவது விசுத்தி; ஆறாவது ஆக்கை; ஏழாவது ஆயிரம் இதழ்களைக் கொண்ட சகஸ்ராரம்.

ஆரம்ப நிலையில் உள்ளது மூலாதாரம்; உயர்ந்த நிலையில் உள்ளது சகஸ்ராரம்.

சுவாசத்தை ஒழுங்குபடுத்தும் பயிற்சியான பிராணா யாமத்தின் மூலம் கிளம்பும் குண்டலினி சக்தியை மூலாதாரத்திலிருந்து மேலெழுப்பி சகஸ்ராரத்துக்குக் கொண்டு செல்லவேண்டும்.

இந்தச் சக்தியே ''ஓஜஸ்'' என்று அழைக்கப்படு கிறது.

உபதேசங்கள் ஆசையையும் வெறுப்பையும் உள்ளீடாகக் கொண்டு மக்களிடையே பேத புக்தியை உண்டு பண்ணாமலிருக்க வேண்டுமானால், உபதேசம் செய்பவர், தம் வாழ்க்கையில் ஓஜஸ் சக்தியை வளர்க்கும் சாதனைகளில் நம்பிக்கை கொண்டு, அதனை வளர்க்கும் குறிக்கோளையுடையவராக இருக்கவேண்டும். அவர் இளம் வயதினருக்கும் அப்பயிற்சியை அளிக்காமல் இருக்க மாட்டார்.

அப்படிப்பட்ட நல்ல குரு பணிபுரியும் இடம் பள்ளியல்ல; கோயில். கோயிலைப் போல் புனிதமான எண்ணங்களை உருவாக்கும் புண்ணிய இடம்.

உலகில் தீமைகள் தவிர்க்க முடியாத அங்கம் எனக் காட்டவே அமுதம் வெளிவருவதற்காகப் பாற்கடலைக் கடையப் போக, விஷம் வெளிப்பட்டது.

மானுடருக்கான தர்மங்கள் 'தர்மன்' என்ற மூர்த்தியாகப் பிரம்மாவின் வலமார்பினின்று வெளிப்பட்ட அதே நேரத்தில் அவரது முதுகிலிருந்து 'அதர்மன்' வெளிப்பட்டது, என்று புராணங்கள் கூறும்.

எனவே ஏமாற்றங்கள், கவலைகள், நிராசைகள், சிடுசிடுப்புகள், எதிர்ப்புகள் இல்லாத மனிதன் இல்லை.

தானாகவே உயிர் விடவேண்டும் என்று நினைத்தால் தான், உயிர்விடமுடியும் என்ற அபூர்வமான வரம் பெற்றவர் பீஷ்மர். அவருக்கே 'சிகண்டி' என்ற ஓர் எதிரி உண்டாகி விட்டானென்றால் யாருக்குத்தான் எதிரிகளில்லாமல் இருக்கிறார்கள்?

பயத்தைப் போக்குவது இன்றியமையாத கடமையாகும்.

'நாம் அனாதைகள்; ஏழைகள்; யாராவது நமக்குத் தீங்கு செய்து நம்மை அழித்து விடுவார்கள்', என்ற பய உணர்வு குழந்தை உள்ளங்களில் ஏற்பட்டுவிடக் கூடாது என்பது பாரதியாரின் இதய தாகமாகும். அதற்காகவே அவர், கடவுள் நம்பிக்கையைப் பிஞ்சு உள்ளங்களில் விதைக்கிறார்.

''தெய்வம் நமக்குத் துணை பாப்பா — ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா.''
''துன்பம் நெருங்கி வந்த போதும் — நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா!
அன்பு மிகுந்த தெய்வமுண்டு — துன்பம்
அத்தனையும் போக்கி விடும் பாப்பா''.

நடையில் நின்று உயர் நாயகனாக வாழ்ந்த தர்மத்தின் வடிவமான ராமபிரானை வணங்குவோம்.

அவனின் பிரதிபிம்பமாகத் தோன்றிய மகாத்மாஜி நமக்களித்த வாழ்வியல் முறைகளைச் சிந்திப்போம்; செயல் படுத்த முயற்சிப்போம். அடுத்தபடியாகக் கம்ப நாட்டாழ்வார் காட்டும் அறிவு வளர்ச்சியின் ஐந்தாவது படியான இன்பத்தை அணுகுவோம். 'அறத்தான் வருவதே இன்பம்' என்றுதானே வள்ளுவரும் கூறுகிறார்?

**6 (உ) இன்பம் :** கலங்காத நீரில் காட்சி தெரியும். குழப்பமில்லாத அறிவில் தத்துவம் பிறக்கும். அதுபோல் நெறியுள்ள வாழ்வில் இன்பம் பிறக்கும்.

காரிய காரணத்தில் அடங்கியது நியாயம். நியாயத்தில் அடங்கியது விவேகம். விவேகத்தில் அடங்கியது இன்பம்.

தெளிவான, சுத்தமான தண்ணீரில் ஒரு கல்லைப் போட்ட வுடன் அடியிலுள்ள சகதி மேலே வந்து அசுத்தமாக்கு வதைப்போல், ஆனந்த மயமான வாழ்விலே ஒரு பிரச்சினை எழும்பியவுடன் அடி மனதிலுள்ள தீய இயல்புகள் மேலே வந்து முகத்தைப் பொலிவிழக்கச் செய்தால் அந்த இன்பம் இன்பமாகுமா?

ஆகாது. எனவே மனிதன் அனுபவிக்கும் இன்பம் புறத்தில் இல்லை. அகத்தில் இருக்கிறது. இதற்கு இராமா யணத்தில் ஒரு சான்று காண்போம்.

ஒரே காடுதான் கூனியின் கைப்பாவையான கைகேயிக் குப் புழுதி படிந்த காடாகக் காட்சியளித்தது.

(பூழி வெங்கானம்)

அதே காடு இராமபிரானுக்கு (மலர்களால்) மின்னலைப் போல் பிரகாசிக்கும் வனமாகக் காட்சியளித்தது. (மின் ஒளிர் கானம்)

கைகேயி பார்த்தது, புறக் கண்களால், அரசியல் கண்ணோட்டத்தில்.

இராமபிரான் பார்த்தது, அகக் கண்களால், ஆன்மீகக் கண்ணோட்டத்தில்.

தன் மகன் பரதன் ஆட்சி பீடத்தில் இருந்து நீடுழி காலம் புகழோடு வாழ வேண்டுமானால், இராமபிரானும் உயிரோடு இருந்து மக்களும் மனம் மாறிவிட்டால், அவன் ஆட்சி கவிழுமல்லவா?

புழுதி படிந்த காட்டில் மனித நடமாட்டமிராது. மிருகங்கள் நடமாடும். அவைகளால் கொல்லப்பட்டு இராம

பிரான் இறக்கட்டும் என்ற மனக்கடுப்போடு வெறுப்புக்கு உட்பட்ட மனமுடன் பார்த்தாள், கைகேயி.

அதனால் அவள் கண்களுக்குப் புழுதி படிந்த காடாகக் காட்சியளித்தது.

'தாயிற் சிறந்தொரு கோயிலில்லை, தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்ற முதுமொழியை வாழ்வில் கடைப்பிடித்து வாழ அருமையான சந்தர்ப்பம் வாய்த்த தென்ற விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் பார்த்தான் இராமபிரான்.

அதனால் அவன் கண்களுக்கு மின்னலைப்போல் பிர காசிக்கும் வனமாகக் காட்சியளித்தது.

எனவே இராமபிரானும் கைகேயியும் நமக்குக் காட் டும் வாழ்வியல் தத்துவத்தை ஆழ்ந்து சிந்தித்தால், இன்பம் புறத்தில் இல்லை; அகத்தில் இருக்கிறது என்பதாகும்.

தன் பிள்ளை தவிர தன் சக்களத்தியின் பிள்ளை தன் கணவன் மடியில் உட்காரக் கூடாது என்று சிறுவன் துருவனை விரட்டி அடித்தாள், ஆதிக்கபுரியில் அமர்ந் திருந்த அவன் சிற்றன்னை.

ஈன்ற தாய் அச்செயலைக் கண்டாள். அடிவயிற் றைப் பிசைந்துகொண்டு துன்பப்பட்டாள். 'நீ இறைவன் மடியில் உட்காரப் பிறந்தவன்' என்று தேற்றித் தன் மகனை அணைத்துக் கொண்டாள்.

தாயின் அணைப்பிலிருந்து விடுபட்டு இறைவன் மடி யில் உட்காரச் செல்லும் நோக்கோடு காடு சென்றான், துருவன்.

ஆன்ம குருவாக நாரத பகவான் காட்சியளித்து, அவனை அணைத்துக் கொண்டிருக்கும் பாச மயக்கங்களிலிருந்து விடுவித்தார்.

தவத்திலீடுபட்ட துருவனுக்கு இறைவன் காட்சியளித்து, நட்சத்திரங்களிலே சிறந்த துருவ நட்சத்திர பதவி அளித்தார்.

தகப்பன் மடியிலே உட்காரத் தடை போட்டுத் துருவனை துருவ நட்சத்திரமாக்கினாள் அவன் சிற்றன்னை என்றால் அது அவள் செயல் அல்ல.

'காலமே மதியினுக்கோர் கருவி', என்று இறைவன் அவள் உருவத்தில் நடத்திய லீலை.

அவள் செயலை மறக் கருணையாக எடுத்துக் கொண்டான் துருவன். அதனால் அவனுக்கு இன்பம் அகத்தில் தோன்றியது.

நாடாளத் தடைபோட்டு அவனைக் காடாள வைத்தாள். அரக்கர்களை அழிக்கச் செய்துச் சாதுக்களைக் காப்பாற்றும்படிச் செய்தாள். தன் மகன் மூலம் அவனது பாதுகைகளுக்கு ஏற்றமளிக்கும்படிச் செய்தாள்.

இத்தனை செயல்களும் இராமபிரானுக்குக் கைகேயி செய்தாள் என்றால், அவைகள் அவளது செயல்களல்ல.

'காலமே மதியினுக் கோர் கருவி', என்று இறைவன் அவள் உருவில் நடத்திய லீலைகள்.

அவள் செயலை மறக் கருணையாக எடுத்துக் கொண்டான் இராமபிரான். அதனால் அவனுக்கு இன்பம் அகத்தில் தோன்றியது. அவன்முகம்; 'அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றது'.

நரியோடு சேர்ந்த சேவல் நன்மையை அடையாது.

அழுகல் பொருள்களுடன் சேர்ந்த நல்ல பொருள் களும் அழுகாமலிருக்க முடியாது.

அதுமாதிரி தீயவர்களுடன் சேர்ந்த நல்லவர்கள் நன்மையடையமாட்டார்கள்.

எனவே நல்ல எண்ணங்கள் வளர்வதற்கு நல்லோரின் உறவும், நட்பும், நல்லுரைகளும் அவசியம் வேண்டும்.

மகாத்மாஜியின் வாழ்க்கையில் அவருடைய தாய் புத் தலிபாய் கூறிய கதையும் அவள் மேற்கொண்ட விரதமும் அண்ணலின் இளம் பருவத்தில் நெறிமுறைகள் ஏற்படுத் தின.

குழந்தைகளின் இன்பமான வாழ்விற்குப் பெற்றோர் களின் பழக்க வழக்கங்கள் முக்கியப் பங்கேற்கும்.

குருடு, செவிடு, ஊமையான ஹெலன் கெல்லர், 'எனது வாழ்வு ஒரு மகிழ்ச்சியான இன்பச்சோலை' என்று கூறி னார். செயற்கரிய செயல்கள் செய்தார். உலகப் புகழ் பெற்றார். எப்படி?

புலன்களின் சுபாவம் — இன்பங்களைத் தேடுவது. ஹெலன் கெல்லர் புலன்களின் கவர்ச்சியிலிருந்து விடுபட்ட வரானார். அதனால் அவருக்கு ஆத்ம சிந்தனை மேலோங் கியது. தான் யார்? தன்னுடைய சக்தியின் அளவு என்ன? என்பதில் தெளிவடைந்தார். நிலைத்த மதியில் செய்யும் செயல்களில் ஈடுபட்டார்.

ரணசிகிச்சை செய்த ஆயுதம், சிகிச்சை வெற்றி யடைந்ததற்காக மகிழ்ச்சி அடையாது. தோல்வியடைந்த

தற்காகக் கண்ணீர்விடாது. 'தான் ஒரு வைத்தியரின் கருவியே', என்ற நிலையில் இருக்கும்.

அந்த ஆயுதத்தைப் போல் வெற்றி தோல்விகளைச் சமமாக எண்ணி 'தான் ஆண்டவனின் ஒரு கருவியே', என்ற மன நிலையில் செய்யும் செயல்களில் ஈடுபட்டார் ஹெலன் கெல்லர். அதனால் உலகப் புகழ் பெற்றார்.

புகழ், பதவி, பணம் ஆகியவற்றில் நிறைவு பெற்று ஆட்சி பீடத்தை அலங்கரித்தவன நெப்போலியன்.

'என் வாழ்க்கையில் இன்பம் நிறைந்த ஆறு நாட்களைக் கண்டதே இல்லை', என்று அவன் கூறினான்.

காரணம், அவன் புலன்களின் கவர்ச்சியிலிருந்து விடுபடவில்லை. அதனால் அவனுக்கு ஆத்ம சிந்தனை இல்லை. வெற்றி தோல்விகளுக்குத் தானே பொறுப்பு என்ற எண்ணம் உண்டு. மனதில் அமைதி ஏற்படவில்லை. அமைதி இல்லாதவனுக்கு இன்பம் எப்படிக் கிடைக்கும்?

பரம்பொருள் என்ற இலட்சியத்தை அடைய முயற்சிப்பதே மானுடப் பிறவியின் குறிக்கோள். தான் வளர்ந்து வருகிறோம் என்ற நம்பிக்கை அந்தக் குறிக்கோளில் முக்கிய இடம் பெறவேண்டும்.

அந்த நம்பிக்கை என்னும் பாதையில் முதலில் நிறுத்தப்படுபவன் மாணவனே.

அவனுக்குப்பின் முறையே இல்லறத்தான், தொண்டன், துறவி என்ற பாகுபாடுகள் கிலோ மீட்டர் கற்களாக நிறுத்தி வைக்கப்படுவார்கள்.

சமுதாய ஒழுங்கைக் கருதித் தொழிலையும் குணங் களையும் ஆதாரமாகக் கொண்டு வர்ணங்களாகப் பிரித் திருப்பதைத் தெளிவாக உணரும் பொழுது, 'செய்யும் தொழிலைத் தெய்வமாகக் கருதும்' உள்ளம் தோன்றும். அந்த உள்ளம் தொழிலில் ஈடுபடும் பொழுது இன்பம் அடையும்.

ஓநாய் புதுப்புது இரத்தங்களுக்காக ஓடி அலைவதைப் போல் புதுப் புது வேலைகளைத் தேடி அலையாது.

வெளிச்சத்திற்குக் காரணமான டார்ச்லைட்டை அந்த வெளிச்சத்தினால் பார்க்க முடியாது.

அதுபோல் மனதிற்குக் காரணமான உணர்வுகளை மனதால் அறிய முடியாது. செய்யும் தொழிலால் அறிய முடியும். கட்டுப்பாடான வாழ்வின் மூலம் உணர முடியும்.

இரண்டு லாரி செங்கல்களைத் தாண்டுவது கஷ்டம். அவைகளையே குறிப்பிட்ட அளவில் சுவராகக் கட்டி விட்டால் எளிதில் தாண்ட முடியும்.

அதுபோல் கட்டுப்பாடான வாழ்வின் மூலம் மன நிலையை உணர்ந்து திருந்தி வாழ முடியும்.

தன் தோட்டத்திலுள்ள குளத்தில் உயர்வகை மீன் களைப் போற்றிப் பாதுகாத்து வந்தான் ஓர் விவசாயி. எதிர்பாராமல் ஒரு நாள் பார்க்கும் பொழுது அந்தக் குளத்தில் ஓர் அழகான தாமரை மலர் படர்ந்து வளர்ந் திருந்தது. தாமரை படர்ந்தால் மீன் வாழ முடியாது.

தாமரையை வெட்டவும் மனமில்லை. மீன்களை இறக்க விடவும் மனமில்லை.

அந்நிலையில் அந்த விவசாயி ஒரு நிபுணரை அழைத்து யோசனை கேட்க, அவர் நான்கு நாட்கள் மீனையும் தாமரை மலரையும் அளவெடுத்துக் கணக்குப் பெருக்கினார்.

'தாமரை மலரை பாதிக்கு மேல் வளர விடாமல் வெட்டி விட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். ஒரு பாதி மீன், ஒரு பாதி தாமரை மலர்களிருக்கும். ஆயிரம் நாட்களில் மூடும் நிலை ஏற்படும். அதற்குள் தொளாயிரத்துத் துத் தொண்ணூறு நாட்கள் ஆனவுடன் வெட்டி விட வேண்டும்' என்று சொன்னார். விவசாயி சரி என்று சொல்லி விட்டான்.

குறிப்பிட்ட காலத்தில் வெட்ட வேண்டிய நாள் வரும் பொழுது எதிர்பாராமல் விவசாயிக்கு உடல்நிலை சரியில்லாமற் போய் விட்டது.

தாமரை மலர்கள் மலர்ந்து மீன்கள் இறந்து விட்டன. விவசாயி ஏமாற்றமடைந்தான்.

தன் மனம் போன போக்கெல்லாம் வாழ்ந்துவிட்டுப் பின் விரக்தி நிலையில் ஆன்மீக வாழ்வில் ஈடுபட்டால் மீன்களை இழந்த அந்த விவசாயியைப் போல் விழிப்புணர்வை இழந்து போலி வாழ்வை மேற்கொள்ள நேரிடும். இன்பங்களை உணர முடியாது.

அதனால்தான் மகாத்மாஜி மாணவுப் பருவத்திலேயே உடல், உள்ளம், ஆன்மா ஆகிய முப்பண்புகளையும் ஒருங்கே வளர்க்கும் ஆதாரக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார்.

அத்திட்டத்தைச் செயல்படுத்தாண்மையினால் பரந்த மனப்பான்மை, நல்லதைப் பொறுக்கி எடுத்துச் செயல்

படுத்த முயற்சிக்கும் தன்மை, மனதிலுள்ளதை எடுத்துச் சொல்ல அனுமதிக்கும் போக்கு இவை போன்ற அடித் தளங்களில் உள்ளம் வளரவில்லை. அதனால் அறிவுச் சுயாதீனத்தை இழந்து போலி மதச் சார்பின்மையைப் பற்றிய பேச்சுக்களைப் பேசிப் பேத உணர்வுகளுக்கு இட மளித்து வருகிறார்கள்.

'மதம்', என்பது ஒருவருடைய சுய விளம்பரத்திற் காகச் செய்யப்படும் வானொலி ஒலிபரப்பல்ல.

அது ஒருவருடைய அபிப்ராயம். இரகசியமாக ஒருவர் பின்பற்றும் வாழ்க்கைப் பண்பு.

ஒருவருடைய சிந்தனைகளையும் வாழ்க்கையின் மதிப் புக்களையும் அது உயர்த்துவதாக இருக்கும்.

'இறைவனுடைய உருவத்திலும் அவனது குணங் களிலும் ஆழ்ந்த பற்றுதல் ஏற்படும் வரை உலகப் பற்றுக் கள் நீங்குவதில்லை' என்ற கொள்கையில் பூர்ண நம்பிக் கை வைக்கச் செய்து வாழ்வில் கடைப்பிடிக்கச் செய்யும்.

தன் மனதைத் தானே ஆராய்ந்து, தன் பலவீனங் களைத் தானே தெரிந்து கொள்ளும் பயிற்சியை (சுவாத் தியாயம்) மேற்கொள்ளச் செய்வதே மதமாகும்.

அறிவிற் சிறந்தோருக்குத் தத்துவ உபதேசங்களும், நடுத்தர மக்களுக்குப் புராணங்களும், பாமரர்களுக்குச் சடங்குகளும் அளித்து மனதைப் பக்குவப்படுத்துவதற்கு நல் நெறிகளைக் காட்டுவது — மதமாகும்.

மகாத்மாஜியிடம் ஒரு தடவை ஒரு அன்பர், 'இந்து மதத்தில் இத்தனை நூல்கள் உள்ளனவே. இவையனைத்

தையும் கற்று எப்போது ஒருவர் பரம்பொருளை அடை வது', என்று கேட்டாராம்.

அதற்கு மகாத்மாஜி, ''இந்து மதத்தில் அத்தனை நூல்களும் எரிந்து அழிந்து போனாலும் சரி. 'ஈசாவாஸ் யம் இதம் சர்வம்' அதாவது 'எங்கும் பரம்பொருளே பரவி நிற்கிறது' என்று கூறும் ஒருவர் எஞ்சியிருந்தாலும் போதும், இந்து மதம் பிழைத்து எழுந்து விடும்'' என்றா ராம்.

ஆகவே உலகம் அனைத்தும் பரவி நிற்பது பரம் பொருள் என்பதே நமது பண்பாட்டின் மையக் கருத்து. அதனை மாணவப் பருவத்தில் வளர்ப்பதே ஆதாரக் கல்வியின் நோக்கமாகும்.

ஒரே சிற்பியால் படியாக வடிக்கப்பட்ட கல், கால் களால் மிதிக்கப்படுகிறது. சிலையாக வடிக்கப்பட்ட கல், கைகளால் ஆராதனை செய்து மதிக்கப்படுகிறது.

அதுபோல் இறைவனாகிய சிற்பி அவரவர் வினைகளுக் கேற்ப ஒருவனைப் பண்பாளனாகவும் மற்றொருவனைப் பாவியாகவும் படைக்கிறான். இதில் நம் நிலை குறித்து நாம் வருந்தவோ மகிழவோ என்ன இருக்கிறது? அவனி டமே அந்தப் பொறுப்பு உள்ளது. அவன் விரும்பிய வண் ணம் செய்யட்டும் என்று இறைவனின் படைப்புப் பெரு மையை வெகு அழகாக விளக்கி அவனிடம் சரணாகதி அடைகிறார் பாரதியார்.

''ஆங்கொரு கல்லை வாயிற் படிஎன்று
அமைத்தனன் சிற்பி, மற்றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்று
உயர்த்தினான்; உலகினோர் தாய்நீ

யாங்கணே, எவரை, எங்ஙனம் சமைத்தற்
கெண்ணமோ, அங்ஙனம் சமைப்பாய்
ஈங்குனைச் சரணென் றெய்தினேன்; என்னை
இருங்கலைப் புலவனாக் குதியே.''

நாமாக இது வேண்டும், அது வேண்டும் என்று வேண்டு வதை விட, அவன் விருப்பப்படி வாழ்வு அமைந்ததாகப் பாவனை செய்து கொண்டால் இன்பம் ஏற்படும். வாழ் வின் இரகசியத்தை உள்ளபடி உணர முடியும்.

ஒன்றை அறிந்துகொள்வது முக்கியம். அதை விடத் தெளிவாக அதனை அறிந்துகொள்வது மிகவும் முக்கியம்.

அந்தத் தெளிவை எங்ஙனம் பெற முடியும்?

அம்பிகையின் அருளினால் தான் அறிவில் தெளிவைப் பெறமுடியும் என்கிறார் பாரதியார்.

''திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல் அறிவு வேண்டும்.''

கலையிலே சிறந்த கலை எது என்றால், தான் அறிந்து கொண்டவற்றைத் தெளிவாக மற்றோர்க்கு விளங்குகின்ற விதத்திலே எடுத்து விளக்கத் தெரியவேண்டும். அதற்கு உயர்ந்த மனப்பக்குவம் பெறவேண்டும். அதுதான் சிறந்த கலையாகும்.

தான் அறிந்து கொண்டவற்றைத் தெளிவாக விளக்கும் வண்ணம் எடுத்துரைப்பவரே 'நல்ல குரு' என்றழைக்கப் படுவார். அந்தத் திறன் எல்லோர்க்கும் வாய்த்து விடுவ தில்லை.

இறைவனின் அருளாலேயே இத்திறன் ஒரு சிலருக்கு மட்டுமே வாய்க்கப் பெறும் என்பது பாரதியின் கருத்து.

அவ்வாறு தெளிவுற எடுத்துக் கூறத் தெரியாமல் உள் ளவர்கள் எவ்வளவு பெரிய மேதைகளாக இருப்பினும் அவர்கள் மணம் வீசாத அழகிய பூங்கொத்து போன்றவர் களே என்று சாடுகின்றார் வள்ளுவர்.

''இணர்ஊழ்த்தும் நாறா மலர்அனையர்
கற்ற(து)
உணர விரித்துஉரையா தார்.'' (650)

தெளிவுறவே அறிந்துகொள்வது; அறிந்துகொண்டதை மற்றவர்கள் புரியும் வண்ணம் தெளிவாக எடுத்து விளக்கு வது; இன்பம் உண்டாவதற்காக உள்ளத்தில் ஆனந்தக் கனவுகள் பல காட்டுவது; கண்ணீர்த் துளிகள் வெளி வரும்படி இறைவனை நினைத்து உருகுவது ஆகியவைக ளெல்லாம் கலைவாணியின் அருளின் விளைவால் நடை பெறும் தொழில்கள் என்கிறார் பாரதியார்.

''தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர
மொழிந்திடுதல்; சிந்திப்பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக் கனவுபல
காட்டல், கண்ணீர்த்
துளிவர உள்ளுருக்குதல், இங்கிவையெல்லாம்
நீ அருளும் தொழில்களன்றோ?''

இடைவிடாத எண்ணெய் ஒழுக்குப் போன்று, அணுச் செறிவு போன்று கலைவாணியின் அருளினால் தன் உள்ளம் இயக்கப்பட வேண்டுமென்று பிரார்த்திக்கிறார் பாரதியார்.

அப்பொழுதுதானே தான் அறிந்துகொண்டதை மற்ற வர்களுக்குப் புரியும் வண்ணம் தெளிவாக எடுத்து விளக்க முடியும்? இன்பம் காணமுடியும்?

அறிவியலார் கூறும் எலக்ட்ரான் அணுக் கூறுகள் மையத்திலிருந்து விலகி வட்டப் பாதையில் சுற்றிக்கொண் டிருப்பதைப் போல், வானநூலார் கூறும் வானிலே கோள் கள் ஓரிடத்தில் நிலையாக நில்லாமல் யாண்டும் சூரியனைச் சுற்றி இயங்கிக்கொண்டே இருப்பதைப் போல், கலை வாணியின் அருளினால்தான் உள்ளமும் இயக்கப்பட வேண்டுமென்கிறார் பாரதியார்.

> ''இடையின்றி அணுக்களெலாம் சுழலுமென
> இயல்நூலார் இசைத்தல் கேட்டோம்
> இடையின்றிக் கதிர்களெலாம் சுழலுமென
> வானூலார் இயம்புகின்றார்
> இடையின்றித் தொழில்புரிதல் உலகினிடைப்
> பொருட் கெல்லாம் இயற்கையின்
> இடையின்றிக் கலைமகளே! நினதருளில்
> எனதுள்ளம் இயங்கொணாதோ?''

'மிக்க பலம் பெற்ற புலன்களின் கூட்டம் மகா வித் வானையும் இழுக்கிறது; தன் வசப்படுத்துகிறது' என்பது மகான்களின் வாக்கு. ('பலவாந் இந்த்ரியக்ராம? வித்வாம் ஸமபி கர்ஷதி'.)

புலன்களை வென்று தூய்மையான வாழ்வில் ஈடுபட இறைவனைச் சரணடைவதே உற்ற வழியாகும்.

சரணடையும் பொழுது பிறவிப் பிணியை ஒழிப்பதை யே வரமாகக் கேட்க வேண்டும் என்பது பாரதியின் கருத்து. கவலையைப் போக்கி சந்தோஷத்தை அடைய நம்மால் இயலாது. இறைவனே அக்காரியங்களைச் செய்ய வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார் பாரதியார்.

''நின்னைச் சிலவரங்கள் கேட்பேன் — அவை
நேரே இன்றெனக்குத் தருவாய் — என்றன்
முன்னைத் தீயவினைப் பயன்கள் — இன்னும்
மூளாதழிந்திடுதல் வேண்டும் — இனி
என்னைப் புதிய வுயிராக்கி — எனக்கு
ஏதுங் கவலையறச் செய்து — என்றும்
சந்தோஷங் கொண்டிருக்கச் செய்வாய்.''

உள்ளத்தில் பொதிந்துள்ள ஆணவம், தாழ்வு மனப் பான்மை ஆகிய குப்பைகளை அகற்றாவிடில் உண்மையான இன்பம் உண்டாகாது.

'கல்வியானது கண்டிப்பாக ஆனந்தத்தைக் கொடுக்க வேண்டும். ஆனால் இன்று கையாளப்படும் முறையில் இந்த அடிப்படை அணுகுமுறை இல்லை', என்று இந்திய தேசிய அறிவியல் கவுன்சில் தலைவரும், இராஜ்ய சபா அங் கத்தினருமான திரு. M.G.K. மேனன் 9-3-91-ல் கூறியுள்ளார். ('Education must be made enjoyable; but this basic approach is absent in the way it is handled to-day.' M. G. K. Menon, President, Indian National Council of Scientific Union and Rajya Saba Member said on Saturday, 9-3-91 — *Indian Express*: *11-3-91*.

உடல் உள்ளத்தை மட்டும் வளர்க்கிற கல்வி பூரண இன்பத்தை அளிக்க முடியாது. ஆன்மாவை வளர்க்கும் பொழுதே பூரண இன்பத்தை அளிக்கும்.

'ஒவ்வொருவரிடமும் தெய்வ சக்தி நிறைந்திருக்கிறது. மானிடப் போர்வை போர்த்திய தெய்வம் நாமே' — என்று கூறுவார் சுவாமி விவேகானந்தர். ('Each soul is

potentially Divine. We are the human covering with Divine.')

அந்த தெய்வ சக்தியை (ஆன்மா) உணர்வதற்கு வழி வகுப்பதே கல்வியின் நோக்கம். ஆன்மாவின் சொருபம் — ஞான ஆனந்தமயமாய் இருப்பது.

அதனை அறியும்பொழுது ஞானமும் ஆனந்தமும் ஒருங்கே உண்டாகும்.

'கள்ளத்தனமாக மனதையும் புத்தியையும் அபகரிக்கும் ஐம்புலன்கள் மாறும். எப்படி மாறும்?

விழாக்களில் பயன்படுத்தும் பெரிய விளக்குகளாக மாறும். அக இருளை அகற்றும். அறிவிலே தெளிவு ஏற்படுத்தும். சீவான்மா சிவலிங்கமாகக் காட்சியளிக்கும்', என்கிறார் திருமூலர்.

> ''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
> வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
> தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே.''

எல்லா உயிரினங்களையும் சிவலிங்கமாகப் பார்க்கும் தெளிவான அறிவிலேதான் இன்பமுண்டாகும் என் பதைக் குறிப்புணர்த்துகிறார் திருமூலர்.

அறிவுள்ள அறிவற்ற எல்லாப் பொருட்களிலும் நாராயணன் உள்ளான் என்று ஆய்ந்துணரமாட்டாதவர் கள் கற்ற கல்வி எல்லாம் மிகத் தாழ்ந்தது என்கிறார் திருமழிசையாழ்வார்.

"..........................................யாவராய்
நிற்கின்ற தெல்லாம் நெடுமாலென்றோ
ராதார்
கற்கின்ற தெல்லாம் கடை."

வாய்மை ஒன்றே பாவங்களை எல்லாம் அரிக்கும் ஆற்றலைப் பெற்றுள்ளது. அவ்வாய்மையைப் பெற்று விக்கும் கல்வியை இளமையிற் பயிற்றுவிப்பது அறிவுடைமை.

பூமிக்கடியில் தண்ணீர் இருக்கிறது. தோண்டுகின்ற கருவி, அதனைக் கையாளுகின்றவரின் பொருளாதார வலிமை, முயற்சி ஆகியவற்றைப் பொறுத்து அது வெளிப் படுகிறது.

மானுட உள்ளங்களில் அறிவு இருக்கிறது. கற்கின்ற முறை, உள்ள வலிமை, விடாமுயற்சி ஆகியவற்றைப் பொறுத்து அது வளர்ச்சியுறுகிறது.

பாறையைப் பொறுத்துத் தண்ணீரின் சுவை அமையும்.

நல்ல உள்ளத்தைப் பொறுத்து அறிவின் தன்மை அமையும்.

நல்ல உள்ளம் அமைவது — கேள்வி, தவம், அன்பு, தருமம், இன்பம் ஆகிய ஐந்து படிகளில் முறையே அறிவு வளரும் பொழுது.

அறிவு வளர்வதற்குக் கோயில்களைப் போல் பள்ளி களையும் புனிதமாகக் கருதுவோமாக!

"பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம் —
எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்."

ஸ்ரீ ராமார்ப்பணம்.



## நூலாசிரியர்

A. ஸ்ரீராமுலு தேசிகன்

- ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகிலுள்ள நாச்சியார்பட்டி நா.கி. கோபால்சாமி நடுநிலைப்பள்ளியில் ஆசிரியப் பணி; இருப்பு : புதுச்செங்கெல்குளம்.
- வைணவ மாநாடுகள், திருக்கோயில்கள், சபாக்கள், வானொலி ஆகியவைகளில் ஆன்மீக நெறி பரப்பும் தெய்வத் திருப்பணி.
- திருப்பதி — திருமலை தேவஸ்தானத்தாரின் மாதப் பத்திரிக்கை ஸப்தகிரி, மாதஜோதிடம் மற்றும் வைணவ மாதப் பத்திரிக்கை திருமால் போன்றவற்றில் ஆன்மீகக் கட்டுரைகள் எழுதுவது.
- *ஆசிரியரின் பிற நூல்கள் :*

  1. கோதையும் கோவிந்தனும் 2. கோதைத் தமிழ் அமுதம் 3. நாராயணனைப் பாடிய நம்மாழ்வார்கள் 4. தசாவதாரத் தத்துவங்கள் 5. கண்ணனின் பாவை கள் 6. பகவான் ஸ்ரீகிருஷ்ண சரிதம் (ஆழ்வார்கள் அருளிச் செயல்களின் ஆழ்பொருள்கள் அடங்கியது)

  ஆழ்வார்களின் சிந்தனைகள் *(அச்சில்)*

---

வைகை அச்சகம் ☐ மதுரை